# கல்கி

KALKI 3.10.93 ரூ. 3.00



* தேசப் படத்தில் காஸா பகுதி, ஜெரிகோ நகர், ஜெருசலம் ஆகியவை கவனிக்கவும். காஸா பகுதியும் வெஸ்ட் பாங்க் பகுதியும் கோலன் பகுதியும் இஸ்ரேலியரால் 1967-ல் கைப்பற்றப்பட்டவை.

# ஒப்பந்தம்: பரம ரகசியம்!

எலியும் பூனையுமாயிருந்தவர்கள் கை குலுக்கியிருக்கிறார்கள்.

கிட்டத்தட்ட ஐம்பது வருடங்களாகத் தீர்க்கப்படாமல் இருந்த பிரச்னைக்குத் தீர்வு கிடைத்திருக்கிறது.

அர்த்தமற்ற பயங்கரவாதம் மனித நேயத்துக்கு வழிவிட்டிருக்கிறது.

இஸ்ரேல் - பாலஸ்தீன விடுதலை அமைப்பு ஆகியவை இடையே ஒப்பந்தம் கையெழுத்தாகி இருக்கிறது.

இஸ்ரேல் தரப்பிலும் பாலஸ்தீனியர்களின் தரப்பிலும் ஏராளமான உயிர்ப் பலி, பல்லாயிரக்கணக்கானவர்களின் உடல் சேதத்துக்குப் பிறகு, ஓசைப்படாமல் ஓர் ஒப்பந்தம் அமைதிக்கு வழிவகுத்திருக்கிறது.

ஓசைப்படாமல் என்றால்?

சென்ற ஒரு வருஷமாக, யாருக்கும் தெரியாமல், நார்வே நாட்டில், ஒப்பந்தம் விஷயமாகப் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்கின்றன. பரம ரகசியமாகப் பதினாலு கூட்டங்கள்! உலக அரங்கில் யாருக்குமே தெரியாது! பல வருடங்களாகப் பல பேச்சு வார்த்தைகளில் இஸ்ரேல் சார்பில் பங்கெடுத்துக் கொண்ட ரூபென்ஸ்டீனுக்குக் கூடத் தெரியாது!

இதில் முக்கியப் பங்கெடுத்துக் கொண்டவர்கள் இஸ்ரேலின் அயலுறவுத் துறை அமைச்சர் பெரஸ்ஸின் அந்தரங்க ஆலோசகர் நிம்ரோட் நொவிக்கும், அராஃபத்தின் ஆலோசகர் முகம்மது அப்பாஸும். இவர்களுக்குத் துணையாக இரண்டு பக்கமிருந்தும் ஐந்து அதிகாரிகள். இவர்களின் பேச்சு வார்த்தைகளைச் சரியானபடி வழிநடத்திச் செல்ல நார்வே நாட்டு வெளியுறவுத் துறை அமைச்சர் ஜோஹன் ஜோர்கன் ஹோல்ஸ்ட்.

ரகசிய சந்திப்புகள் எல்லாமே தனியார் வீடுகளிலும், பண்ணைகளிலும் மட்டுமே





* அராஃபத்


* ரபின்




நடந்ததால், அரசியல் வட்டாரத்தில் யாருக் குமே தெரியவில்லை.

இந்த ஜனவரியில் துவங்கிய பேச்சு வார்த்தைகள் ஆகஸ்ட் இறுதியில் முடிவுக்கு வந்து, ஓர் ஒப்பந்த நகல் தயாரிக்கப்பட்டு விட்டது! இத்தனைக்கும் நார்வே நாட்டு அமைச்சர் - அதிகாரிகள் ஒவ்வொரு முறை யும் டூனிஸ் நகருக்கு வந்து அராஃபத்தைச் சந்தித்து விட்டு, ஒப்பந்த ஷரத்துக்கள் பற்றி ஒவ்வொரு முறையும் விளக்கி விட்டு மறுபடி நார்வேக்குத் திரும்ப வருவார்கள். அப்படியும் ரகசியம் பாதுகாக்கப்பட்டுள் ளது. ஒப்பந்தம் கையெழுத்துக்குத் தயாரான போது மட்டுமே, இஸ்ரேல் அயலுறவுத் துறை அமைச்சர் ஷிமன் பெரஸ் பங்கு கொண்டார். இத்தனை காலமும், இஸ்ரேல் பிரதமர் ரபின் ஒன்றுமே நடக்காத மாதிரி காட்டிக் கொண்டதுதான் சாமர்த்தியம்!

ஜோர்டான் அதிபர் ஹுஸேனுக்கு அசாத்திய கோபம், தம்மை இந்தப் பேச்சு வார்த்தைகள் எதிலும் கண்டுகொள்ளாமல் இருந்து விட்டார்களே என்று. பிறகு ஒரு மாதிரியாக சமாதானம் அடைந்து விட்டார். பாலஸ்தீனத்துக்கு ஆதரவு தந்து வந்த சிரியா, ஜோர்டான், லெபனான் மூன்றுமே இஸ்ரேலுடன் இனி ஒரு சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்று பாலஸ் தீனிய விடுதலை இயக்கம் விரும்புகிறது.

இஸ்ரேலிய துருப்புகள் காஸா பகுதியி லிருந்தும், ஜெரிகோ நகரிலிருந்தும் விலகி, பாலஸ்தீன சுய ஆட்சிக்கு வித்திடப் போவது, அமைதிக்கு வழிவகுக்கும்.

முழு அமைதிக்கு வழிவகுக்குமா?

அங்கேதான் இருக்கிறது சிக்கல். ஜெருசலம் நகர் யாருக்குச் சொந்தம் என்ற பிரச்னை இன்னும் தீர்க்கப்படவில்லை.

இஸ்ரேல் தரப்பிலும், பி.எல்.ஓ. தரப் பிலும் உள்ள தீவிரவாதக் குழுக்கள், தாங் கள் ஏமாற்றப்பட்டு விட்டதாகக் கருதி தங்கள் தலைவர்களை எதிர்த்தே ரகளை செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.

இஸ்ரேலைப் பொறுத்தவரை பிரதமர் ரபினுக்குச் செல்வாக்கு இருக்கிறது. நிலை மையைச் சமாளித்து விடுவார்.

அராஃபத்?

'இப்படி ஓர் ஒப்பந்தம் செய்ததற்காக உம்மைக் கொலை செய்து விடுவேன்!' என்று கூட அராஃபத்தைப் பாலஸ்தீனத் தீவிரவாதிகள் பயமுறுத்தியிருக்கிறார்கள்.

– சாருகேசி

படங்கள் நன்றி : நியூஸ்வீக்

# லஞ்ச ஒழிப்புச் சூரப்புலிகள்!

●● 'பள்ளிகள் நன்கொடை வாங்கி அவற்றின் மேம்பாட்டுக்கு வங்கியில் டெபாசிட் செய்து கொள்ளலாம்' என்று அரசு பச்சைக் கொடி காட்டியதுதான் தாமதம், "ஆயிரம் கொண்டா", "ஐந்நூறு கொண்டா" என்று ஒரே நெருக்குதல்! இவர்களுக்கு ஏழை பணக்காரன் என்ற வேற்றுமை இல்லை. ஒரு தடவை கப்பம் செலுத்தி அடுத்த மூன்று மாதத்துக்குள் மறுபடி கப்பம் கேட்கப்படுகிறது. இந்தக் கிடுக்கிப் பிடியிலிருந்து விடுதலை எப்போது?

தஞ்சை, வளர்மதி ஆசைத்தம்பி.

●● தமிழ்நாடு லஞ்ச ஒழிப்புத் துறையினர் 1992-93க்கு 1124 வழக்குகள் பதிவு செய்தனர். அவற்றில் 543 சப்-இன்ஸ்பெக்டர், துணை தாசில் தார், அலுவலக கண்காணிப்பாளர் போன்றவர்கள். மற்றவை சாதாரண குமாஸ்தாக்கள், போலீஸ்காரர்கள் சம்பந்தப்பட்டவை. பெயருக்கு இரண்டு கெண்டை மீன்களையும் பிடித்துத் தண்டனை பெற்றுத் தந்துள்ளனர். ரூ 50 முதல் ரூ 500 வரை லஞ்சம் பெற்ற நூற்றுக்கணக்கான வழக்குகளைப் பதிவு செய்த சூரப்புலிகள் கையில், அரசியல் வாதிகள், அமைச்சர் பெருமக்கள், உயர்மட்ட அதிகாரிகள் பலரும் அகப்படவேயில்லை! மாறாக இவர்கள் முன்அந்தச் சூரப்புலிகள் கைகட்டி நிற்கின்றனர்! என்ன கேவலம், கொடுமை இது!

கோவை, வடவள்ளி ராமசுப்பிரமணியன்.

# அபாய அறிவிப்பு!

உலக யுத்தத்தின் போது அபாய அறிவிப்புச் சங்குகள் முழங்கியதை நம்மில் பலர் கேட்டிருக்கிறோம். அத்தகைய மூன்று முழக்கங்கள் தற்போது நமது பொருளாதாரத் துறையில் ஒலித்திருக்கின்றன.

செப்டம்பர் 9-ம் தேதி ரிஸர்வ் வங்கி முதல் அபாய அறிவிப்புச் சங்கை முழங்கியது. தனது ஆண்டறிக்கையில், மத்திய பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்டதை விடவும் அசல் பற்றாக்குறை மிக மிக அதிகமாக உயர்ந்து வருவதைச் சுட்டிக்காட்டி கவலை தெரிவித்தது. ஆகஸ்டு 20-ம் தேதி முடிய அசல் பற்றாக்குறை 21,065 கோடி ரூபாய் என்று மதிப்பிட்டுள்ளது. ஆண்டு முடியு முன்னர் இது மேலும் அதிகரிக்கும்.

மத்திய அரசின் பற்றாக்குறை அதிகரிக்கிறது என்றால் அந்த அளவுக்கு நோட்டு அச்சடித்து புழக்கத்துக்கு வரும் என்று அர்த்தம்! மாநில அரசின் பற்றாக்குறை அதிகரிக்கிறது என்றால் அந்த அளவுக்கு ரிஸர்வ் வங்கியில் மேலும் மேலும் கடன் வாங்குகிறது என்று பொருள்! இதனால் விலைவாசிகள் மேலும் உயரும்; நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்படுத்தும் முயற்சிகள் பின்னடைவு காணும். இதனை ரிசர்வ் வங்கி சுட்டிக்காட்டி எச்சரித்திருக்கிறது.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு நிதி அமைச்சர் மன்மோகன் சிங், பொருளாதாரப் பத்திரிகை ஆசிரியர்களிடையே பேசும் போது, நாட்டின் நிதி நிலைமை கவலை அளிப்பதாக உள்ளது என்றும் நல்ல அறுவடைதான் ஓரளவுக்கு உதவிக்கு வந்து கைகொடுக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார். அவருடைய கணக்குப்படி இந்த நிதி ஆண்டின் முடிவில் மத்திய அரசின் பற்றாக்குறை 17,000 கோடி ரூபாயாகவும் மாநில அரசுகளின் பற்றாக்குறை 7,000 கோடி ரூபாயாகவும் இருக்கும்!

நிதி அமைச்சர் இங்கே ஒரு குரல் அழுதிருக்கிற அதே தினம், வாஷிங்டனில் சர்வதேச நிதி நிறுவனம் தனது ஆண்டு அறிக்கையை வெளியிட்டது. அதிலும் இந்தியாவின் பெருகி வரும் பணப் புழக்கம் பற்றிக் கவலை தெரிவிக்கப்பட்டுள்ளது. பணவீக்கம் அதிகரிப்பதைக் கட்டுப்படுத்தவில்லையானால், இந்தியா தனது புதிய பொருளாதாரக் கொள்கையை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியாது என்று சிவப்புக் கொடி காட்டியுள்ளது.

மூன்று கருத்துக்களும் மூன்று திசைகளிலிருந்து வந்தாலும் அவை மூன்றுமே ஒரே மாதிரியான அபாய அறிவிப்புச் சங்கைத்தான் ஊதியுள்ளன.

நரசிம்மராவ் அரசு புதிய தொழில் பொருளாதாரக் கொள்கையை மேள தாளத்துடன் அறிவித்த போது, பிரமாதமான எதிர்பார்ப்பைத் தோற்றுவித்தது. ஆனால் நடைமுறையில் கோளாறு ஏற்பட்டுப் போயிருக்கிறது. இந்தியா தொழில் துறையில் இன்னும் எவ்வளவோ முன்னேற வேண்டும். இந்தத் தொழில் முன்னேற்றத்துக்கு, விவசாயத் துறையில் வெற்றி உறுதியான அஸ்திவாரமாக அமைதல் வேண்டும். எனவே, விவசாயத் - தொழில் துறைகளின் முன்னேற்றத்துக்குத் தேவையான அடிப்படை வசதிகளைப் பெருக்குவதிலேயே அரசு தீவிர கவனம் செலுத்த வேண்டும். தற்போது, 'இதைச் செய்தோம்; அதைச் செய்தோம்' என்று அரசு பப்ளிசிடி ஸ்டண்ட் பண்ணுகிறதே தவிர, உருப்படியாக ஒன்றும் நடக்கவில்லை. வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் அயல்நாடுகளுக்குச் சுற்றுப்பயணம் போவது ஒன்றுதான் அமைச்சர்களும் அதிகாரிகளும் தப்பாமல் செய்கிற காரியமாக உள்ளது. மத்திய - மாநில அரசுகள் உற்பத்திக்கு உதவாத இனங்களில் பணத்தை வீண் விரயம் செய்வதை சற்று விழிப்புணர்ச்சியுடன் உள்ள மக்கள், கண்ணுக்கு மெய்யாக அன்றாடம் காணலாம். இத்தகைய டம்பாச்சாரி செலவினங்கள் கட்டுப்படுத்தப்பட்டாலொழிய நாட்டுக்கு விமோசனமில்லை. அரசின் புள்ளி விவரங்கள் வயிற்றுக்குச் சோறு போடாது.

– வி. கோபாலன்

கார்ட்டூன் நன்றி : எகனாமிக் டைம்ஸ்



# 30 வயதுக்காரர்களே, ஜாக்கிரதையாய் இருங்கள்!

**வயதானவர்களுக்குத்தான் ஹார்ட் அட்டாக் வரும் என்பதில்லை. மாறிவரும் பழக்கங்களால் முப்பது வயதுக்காரர்களுக்கும் இப்போது அந்த ஆபத்து வந்துவிட்டது. இந்த அபாயத்திலிருந்து இளைஞர்கள் தப்பிப்பது எப்படி? விளக்குகிறது கட்டுரை.....**

கணேசன் வயது முப்பத்தியொன்று தான். இஞ்சினியரிங் முடித்த கையோடு, எம்.பி.ஏ. முடித்து விட்டதால், எடுத்த எடுப்பிலேயே ஆறாயிரம் ரூபாய்ச் சம்பளத்தில் உத்தியோகம். திருமணமாகி, மகிழ்ச்சியான குடும்ப வாழ்க்கை. எண்ணூறு சதுர அடியில் ஒரு ஃப்ளாட் வாங்கவும் ஒப்பந்தம் போட்டு, கணிசமான பகுதிப் பணமும் செலுத்தியாகிவிட்டது. இன்னும் சில மாதங்களில் புது பெயிண்ட் மணக்கும் ஃப்ளாட்டுக்குக் குடிபோக வேண்டியது தான் பாக்கி.

இந்த நிலையில்தான் கணேசன் அகால மரணமடைந்து விட்டார்!

திடீரென்று கணேசனுக்கு மரணம் எப்படி சம்பவித்தது? கணேசனின் மனைவி ''எல்லாம் விதி'' என்று கூறினாலும், சென்னை மருத்துவக் கல்லூரி இதய நோய்ப் பிரிவின் கூடுதல் பேராசிரியரும், பிரபல இதய மருத்துவருமான டாக்டர் பிரம்மா வந்தும், ''ஹார்ட் அட்டாக்'' என்



கிறார்.

''வயதானவர்களுக்குத்தான் ஹார்ட் அட்டாக் வரும் என்கிற காலமெல்லாம் மலையேறிவிட்டது. முப்பது வயதுக்காரர்களுக்கும் ஹார்ட் அட்டாக் என்பது இப்போது சகஜமாகிவிட்டது!'' என்கிறார் இவர்.

''ஏன் டாக்டர்?'' - இந்தக் கேள்விக்கு, விவரமாய்ப் பதில் சொல்கிறார் டாக்டர் பிரம்மானந்தம்.

''முதலாவது காரணம், அதிக கொலஸ்டிரால். இன்று நம்முடைய உணவுப் பழக்க வழக்கம், பத்து ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைவிட மிகவும் மாறியுள்ளது. ஃபாஸ்ட் ஃபுட் என்கிற பெயரில் கொழுப்புச் சத்து மிகுந்த, எண்ணெயில் பொறிக்கப்பட்ட உணவுகள், ஐஸ்கிரீம் வகைகள், சாக்லேட் என்று கட்டுப்பாடு இல்லாமல் சாப்பிடுகிறோம்.

''இரண்டாவது காரணம், புகை பிடிப்பது. முப்பது பிளஸ் வயதுக்காரர்களிடையே, புகைபிடிக்கும் பழக்கம் அதிகரித்திருக்கிறது என்பது கண்கூடு.

''மூன்றாவது காரணம், உயர் ரத்த அழுத்தம்; மற்றும் டயபடீஸ். இவை காரணமாய், மிகக் குறைந்த வயதுகாரர்களும் கூட ஹார்ட் அட்டாக்குக்கு ஆளாகி விடுகிறார்கள்.

''நான்காவது காரணம், அதிக எடை. இன்றைய இளைய தலைமுறையினர் உடை விஷயத்தில் செலுத்தும் கவனத்தை உடலின் எடை விஷயத்தில் செலுத்துவதில்லை. ஆணானாலும், பெண்ணானாலும் இவ்வளவு உயரம் என்றால் இத்தனை கிலோ எடைதான் இருக்க வேண்டும் என்று கணக்கு உண்டு. ஆனால் பலர் அது குறித்துக் கவலைப் படுவதே கிடையாது!

''ஐந்தாவது காரணம், இன்று வாழ்க்கை மிகவும் பரபரப்பானதாகி விட்டதும் டென்ஷன் நிறைந்ததாக இருப்பதும்! இந்த டென்ஷன் பள்ளி வாழ்க்கையிலேயே ஆரம்பமாகி விடுகிறது. நிறைய மார்க் வாங்கினால்தான் கல்லூரி அட்மிஷன் என்பதே டென்ஷனை உருவாக்கி விடுகிறது. அப்புறம் எம்.பி.ஏ., கம்பெனி செக்ரட்டரி என்றெல்லாம் பெரிய படிப்புப் படித்து வந்த உடனே பெரிய உத்யோகம் காத்திருக்கிறது. பெரிய அளவில் பொறுப்புக்கள் உடனடியாகத் தலையில் சுமத்தப் படுகின்றன. முன் காலத்தில் இப்படியல்ல. படிப் படியாகத்தான் பொறுப்புக்கள் அதிகரிக்கும். இப்போதோ இளைஞர்கள் எடுத்த எடுப்பிலேயே சவால்கள் நிறைந்த கடுமையான பணிகளை ஏற்றுச் செயல்படுவதால், வாழ்க்கை என்பது பிரச்னைகள் நிறைந்ததாகவும், டென்ஷன் மிகுந்ததாகவும் உள்ளது. டென்ஷன் என்பது ஹார்ட் அட்டாக்குக்கு அல்வா போல.

''ஆறாவது காரணம், பலருக்கு ஆச்சரியமாகக் கூட இருக்கும். ஐம்பத்து ஐந்து வயதுக்குள், ஹார்ட் அட்டாக் தாக்குதலுக்குள்ளான பெற்றோரின் மகன்களுக்கு இளம் வயதிலேயே ஹார்ட் அட்டாக் வர சாத்தியமுண்டு. இந்த சாத்தியம் மகன்களுக்குத்தானேயொழிய மகள்களுக்கு அல்ல என்பது ஒரு நிம்மதியளிக்கும் விதி விலக்கு.

''ஏழாவது காரணம், ரத்தக் குழாயில் ஏற்படும் அதிகப்படியான சுருங்கும் தன்மை (Spasm). ஒருவர் அதிக உணர்ச்சிவசப்படும் போது, வெளிப்படும் ஹார்மோன்களின் பாதிப்பினால், ரத்தக் குழாய்களில் அதிக இறுக்கம் ஏற்படுகிறது. இதனால், ரத்த ஓட்டம் தாற்காலிகமாகத் தடைபடுகிறது; இதயத்தின் செயல்பாட்டில் தடுமாற்றம் ஏற்படுகிறது; நெஞ்சு வலி ஏற்பட்டு, மரணம் சம்பவிக்கிறது.''



★ டாக்டர் பிரம்மானந்தம்

“ நடப்பதும், சைக்கிளில் போவதும் ரொம்பக் குறைந்து விட்டது. உடல் உழைப்பு இல்லாததும் சமீப காலமாய், இளைய தலைமுறையின்ருக்கு ஹார்ட் அட்டாக் அதிகம் வரக் காரணம் என்று கூறலாம். ”

காரணங்களை விளக்கிய டாக்டர், ''வசதியான வாழ்க்கை வாழ்கிறவர்களுக்கு மட்டுமே ஹார்ட் அட்டாக் வரும் என்பது தவறு. என்னுடைய பேஷண்ட்களில் ஒருவர் ஆட்டோ ஓட்டுபவர். இதுவரை இரண்டு முறை அவருக்கு அட்டாக் வந்து

விட்டது. இலேசான அட்டாக்தான் என்பதால் பிழைத்துக் கொண்டு விட்டார். அவருக்கு அட்டாக் வரக்காரணம், அவர் இடைவிடாமல் பிடிக்கும் சிகரெட்தான்!'' என்று இன்னொரு நிஜக்கதையையும் சொல்லிவிட்டு, ஹார்ட் அட்டாக் வருவதற்கான சில அறிகுறிகளையும் சொன்னார் :

- திடீர் என்று மார்பு வலி
- தொடர்ந்து மார்பு வலி. இந்த வலி இடது புஜத்தை நோக்கியோ, கழுத்தை நோக்கியோ, சில சமயங்களில் வலது புஜத்தை நோக்கியோ நகரும்.
- வலியின் போது ஏராளமாய் வியர்த்தல்
- மூச்சுத் திணறல்
- நடுக்கம், தலை சுற்றுதல்
- வாந்தி
- உணர்ச்சி வசப்படும் போது, திடீரென நெஞ்சு வலியும் நிதானமடைந்தவுடன் வலி மறைவதும்.
- உடற் பயிற்சி செய்யும் போது வலியும், நிறுத்தியதும் வலி மறைவதும்.

இப்படியெல்லாம் இருக்கும் பட்சத்தில் ஹார்ட் அட்டாக் உங்களுக்கு வர சாத்தியமுண்டு. நெஞ்சுவலி ஏற்படும் போது, முதலுதவியாக Sorbitrate, Isordil போன்ற மாத்திரைகளை நாக்கின் அடியில் வைத்துக் கொள்ளலாம். இந்த முதலுதவிக்குப் பிறகு டாக்டரிடம் போகலாம்.

''ஹார்ட் அட்டாக் வராமல் தடுக்க என்ன செய்ய வேண்டும் டாக்டர்?''

படபடவென்று நீண்ட பட்டியல் ஒன்றையே அளித்து விட்டார் டாக்டர் பிரம்மானந்தம். பட்டியல் இதோ :

- சிகரெட் பிடிப்பதை நிறுத்துங்கள்
- உணவில் கொழுப்புச் சத்தைக் குறைத்து, கொலஸ்டிரால் அளவு குறைவாய் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள்.
- உடலின் அதிகப்படியான எடையைக் குறையுங்கள்.
- பி.பி.யை கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளுங்கள்.
- டயபடீஸ் என்றால் ஜாக்கிரதையாக இருங்கள்.
- குளுக்கோஸ், கரும்பு போன்ற நேரடியான சர்க்கரை ஐட்டங்களைத் தவிர்த்து விடுங்கள்.

''இவற்றோடு தினமும் வாக்கிங் போவதும் நல்லதுதானே டாக்டர்?''

''நடை மட்டுமில்லை; சீரான ஓட்டம், ஸ்கிப்பிங் போன்ற எந்த அரோபிக் உடற்பயிற்சியுமே மிகவும் நல்லது. தினமும் முப்பது நிமிடங்கள் - வாரத்துக்குக் குறைந்த பட்சம் ஐந்து நாட்களாவது செய்ய வேண்டும்.

ஆனால், இப்போது யாருமே உடலை வருத்திக் கொள்ள விரும்புவதில்லை; வீட்டிலிருந்து அலுவலகத்துக்குக் காரிலோ, இரண்டு சக்கர வாகனங்களிலோ போவதைத்தான் விரும்புகிறார்கள். நடப்பதும், சைக்கிளில் போவதும் ரொம்பக் குறைந்து விட்டது. உடல் உழைப்பு இல்லாததும் சமீப காலமாய், இளைய தலைமுறையினருக்கு ஹார்ட் அட்டாக் அதிகம் வரக் காரணம் என்று கூறலாம். டென்ஷனைக் குறைக்க யோகாசனம் அல்லது தியானம் பெரிதும் உதவும்.

''ஹை ஃபைபர் (high fibre) உணவுகளை அதிக அளவில் உண்ண வேண்டும் என்கிறார்களே. அது என்ன ஹை ஃபைபர்?''

''தமிழில் நார்ச்சத்துப் பொருட்கள் என்கிறோமில்லையா, அவற்றைத்தான் high fibre food என்கிறோம். காய்கறிகளில் காயையும், தோலையும் பிரிக்க முடியாத ஐட்டங்கள் இவை. உதாரணமாகக் கத்தரிக்காய், வெண்டை, புடலங்காய், வாழைத் தண்டு, பாகற்காய் போன்றவை; உருளைக் கிழங்கு, நார்ச்சத்து உணவு அல்ல. காரணம், அதன் தோலைப் பிரித்து எடுத்து விடுகிறோமில்லையா? அது மாவுச் சத்துள்ள பொருள். நார்ச் சத்து உணவுகளை அன்றாட உணவோடு உட்கொண்டால், உணவில் கொஞ்சம் கொழுப்புச்சத்து அதிகமிருந்தால் கூட, அதனைக் கழிவாக்கி வெளியே அனுப்பிவிடும்.''

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி
படங்கள் : கோபிநாத்



''உங்க வீட்ல மாமியார் மருமக தகராறா?''
''எப்படி கண்டு பிடிச்சே?''
''உங்கம்மா எல்லா மோதகத்தையும் மெட்டல் டிடெக்டர் வச்சு பரிசோதனை செய்யறாங்களே!''

- ரவீந்திரன்.

# “பாட்டி! பரீட்சையை நல்லா எழுது!”

பாட்டி என்றாலே ஜபமாலை உருட்டுவதும்; ஈஸிசேரில் சாய்ந்து டி.வி. பார்ப்பதும்; ‘காலம் ரொம்ப கெட்டுப் போச்சு’ என்று புலம்புவதும்; கைக் குழந்தைக்கு கிரைப் வாட்டர் சிபாரிசு செய்வதுமாக... ஒரு இமேஜ் வளர்ந்து விட்டது. இந்த இமேஜை உடைத்தெறியும் ஒரு வித்தியாசமான பாட்டியை அறிமுகப்படுத்துகிறோம் இங்கே. பெயர் : ராதா ராஜகோபாலன். வயது : வருடக் கணக்குப் பார்த்தால் அறுபது; மனத்தளவிலோ நிர்ணயித்துச் சொல்ல முடியாத இளமை + விவேகத்தின் கலவை. அவரைப் பற்றி அவர் மகன் வசுமதி எழுதுகிறார் :

நான் பள்ளி இறுதியாண்டு படித்துக் கொண்டிருந்த சமயம் அது. அப்பாவும் அம்மாவும் திடீரென்று நிறைய கடிதங்கள் எழுதுவதும் பெறுவதுமாக வீடே புதிய கறுகறுப்புடன் சூடுபிடித்தது. ‘பி.யூ.ஸி.’, ‘பி.எஸ்ஸி’, கரஸ்பான்டன்ஸ் பி.ஏ., ‘ஒஸ் மானியாவா? வெங்கடேஸ்வராவா...?’ போன்ற வார்த்தைகளுடன் அடிக்கடி சீரியஸாகப் பேசிக் கொள்வார்கள்.

‘என்னைக் கேட்காமலே என் மேல் படிப்பு பற்றித் தீர்மானம் செய்கிறார்களோ...?’ என்ற சந்தேகம் வர, சற்று கோபமாகவே எதிர்ப்புத் தெரிவித்தேன்.

“அடடா, உன்னைக் கேட்காம முடிவெடுப்போமா வசு. இந்த டிஸ்கஷனெல்லாம் அம்மாவோட மேல் படிப்பு பத்தித் தான்...” என்றார் அப்பா.

சற்று நேரம் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. பள்ளி இறுதி வரை மட்டுமே தமிழ் மீடியத்தில் படித்திருந்தாலும் அம்மாவிடம் தெளிவான சிந்தனையும், பொது அறிவும் நல்ல ஆங்கில உரையாடல் திறமையும் உண்டு. என் சகோதரன், சகோதரியோ, நானோ பள்ளியில் ஏதேனும் பேச்சுப் போட்டிக்கோ கட்டுரை அல்லது கலந்துரையாடலுக்கோ தயார் செய்ய வேண்டியிருந்தால் அம்மாவிடம்தான் போய் நிற்போம். ராத்துக்குப் புளியைக் கரைத்துக் கொண்டே பத்தே நிமிஷங்களில் தெளிவாக, பாயிண்ட் பாயிண்டாகச் சொல்லி எங்களைத் தயார்ப்படுத்தி விடுவார். அப்படியிருக்கையில் அம்மாவுக்கு எதற்கு மேல் படிப்பு...? இத்தனை வயசுக்கு மேல் ஏன் இந்த ஆசை? குடும்பத்தையும் பார்த்துக் கொண்டு எப்படி சமாளிப்பாள்...?

என் எல்லா கேள்விகளுக்கும் அம்மாவிடம் ஒரே பதில் இருந்தது :

“நான் கிராஜுவேட் இல்லைங்கற குறை ரொம்ப நாட்களாகவே எனக்கு உண்டு. கூட்டுக் குடும்பமா இருந்த போது படிக்க முடியலை. இப்போ என் ஆசையை நிறைவேற்றிக்கப் போறேன்...”

அம்மாவின் ஆசையை அப்போதைய என் மனநிலையில் என்னால் துளியும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஓரளவுக்கு வசதியுடன் வாழ்க்கையில் ‘செட்டில்’ ஆன பிறகு யாராவது படிக்கவும் பரீட்சை எழுதவும் ஆசைப்படுவார்களா என்ன...?



● வித்தியாசமான குடும்பம்


* ராஜகோபாலன்

அம்மா பஞ்சாப் யூனிவர்சிடியில் அஞ்சல் வழி பி.யூ.ஸி. வகுப்பில் சேர்ந்தார். பி.யூ.ஸி.யை அஞ்சல் வழியில் அப்போது வழங்கியது அந்த ஒரு பல்கலைக் கழகம் தான்!

சென்னையில் பரீட்சை நடத்தப்படும் என்று முதலில் அறிவித்து விட்டு எக்காரணம் கொண்டோ அதை நிறைவேற்றவில்லை. எனவே அம்மா பரீட்சை எழுத பம்பாய் போக வேண்டியதாகி விட்டது.

பம்பாயில் நண்பர்கள் வீட்டில் தங்கிப் பரீட்சை எழுதுவதாக ஏற்பாடு. நண்பர் வீட்டுக் குழந்தைகள் பரீட்சை எழுத வரும் பெண்ணை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, காதோர நரையுடன் போய் நின்ற அம்மாவைப் பார்த்ததும், ''ஐய...! இது மாமி!...'' என்று அங்கலாய்த்தார்களாம்.

இப்போதும் அதே தொனியில் நீட்டி முழக்கிப் பேசி அச் சம்பவத்தை அம்மா நினைவுகூர்கிறார். ஆனால் இன்றைக்குப் போலவே அன்றைக்கும் அந்த 'கமெண்டை' அவர் மிகச் சாதாரணமாக எடுத்துக் கொண்டார்.

'இப்படிச் செலவு செய்து இவள் படிக்காவிட்டால் என்ன...? மூணு குழந்தைகளை வளர்த்து ஆளாக்க வேண்டாமா...?'

'இவள் பாட்டுக்குப் படிப்பு பரீட்சைன்னு போயிட்டா, பாவம் - வீட்டு ஆண் பிள்ளை சமையல் கட்டில் கரண்டி பிடிக்க வேண்டியிருக்கு.'

'உடம்பைக் கெடுத்துக் கிட்டு அப்படியாவது படிக்காவிட்டால் என்னவாம்...?'

என்று சுற்றமும் நட்பும் வகை வகையாக விமர்சித்ததையும் அம்மா பொருட்படுத்தவில்லை. அவளுக்கு எங்கள் கொள்ளுப் பாட்டியின் (அம்மாவின் தாய்வழிப் பாட்டி)* முழு ஆதரவு இருந்தது! 'யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும்; நீ படி...' என்று தூண்டி விட்டுக் கொண்டே இருப்பார்.

அப்பாவுக்குத் தாம் விரும்பிய அளவுக்குப் படிக்க முடியவில்லையே என்ற குறை எப்போதும் இருந்ததால் அம்மாவின் படிப்பு ஆசைக்குப் பச்சைக் கொடி காண்பித்தார். அது மட்டுமல்ல. அம்மாவின் படிப்பு சம்பந்தமான கடிதத் தொடர்புகள் முழுவதையும் கவனித்துக் கொண்டார். தபாலில் வரும் பாடங்களை வரிசைப்படி ஃபைல் செய்து, அம்மாவின் ஆன்ஸர் ஷீட்களைத் தபாலில் சேர்ப்பது என்று அலுக்காமல் சலிக்காமல் செக்ரட்ரி போல் உதவி செய்வார். அவர் போஸ்ட் ஆபீஸ் பக்கமாகப் போனாலே ''என்ன சார்! இன்னைக்கு ஆன்ஸர் ஷீட் எதுவும் போஸ்ட் பண்ணவில்லையா...?'' என்று அங்கு வேலை பார்த்தவர்கள் கேட்க ஆரம்பிக்கும் அளவுக்கு அப்பாவின் உதவிகள் பிரசித்தியாகி விட்டன!

பி.யூ.ஸி. முடித்ததும் டெல்லி பல்கலைக் கழகத்தில் பி.ஏ. வகுப்பில் சேர்ந்தார் அம்மா. அஞ்சல் வழி மாணவர்களுக்கு contact classes என்று அவ்வப்போது நேரடி வகுப்புகள் உண்டல்லவா... இவை உள்ளூர் பள்ளி அல்லது கல்லூரி வளாகத்தில் நாள் முழுக்க நீடிக்கும். பெரும்பாலும் வார இறுதியில் வரும் இந்த வகுப்புகளுக்கு அப்பாதான் அம்மாவை அழைத்துப் போவார். வகுப்பு முடியும் வரை மரத்தடியில் புத்தகம் படித்துக் கொண்டு காத்திருந்து விட்டு மாலை அம்மாவுடன் வீடு திரும்பு



* ராதா ராஜகோபாலன்

வார்.

நான் பி.எஸ்ஸி முடிப்பதற்கு ஒரு வருடம் முன்னால் அம்மா பி.ஏ. முடித்து விட்டார். அதன் பிறகு நான் எம்.எஸ்ஸி படித்த போதும் என் தங்கை மருத்துவம் படித்த போதும் எங்களுக்குப் பாடங்கள் குறிப்பெடுத்துக் கொடுத்துப் பேருதவியாக இருந்தார். புத்தகங்களுடன் அம்மாவின் தொடர்பு விட்டுப் போகாமலிருக்க இது உதவியது.

அம்மாவின் படிப்பு ஆர்வம் பூர்த்தியாகி விட்டது என்று நாங்கள் நினைத்த போது அவர் எம்.ஏ. வகுப்பில் சேர்ந்தார். எனக்குத் திருமணமாகி, சீமந்தத்துக்கு நாள் குறித்திருந்தார்கள். பூனாவில் நடக்கவிருந்த சீமந்தத்துக்கு 'வர முடியுமா சந்தேகம், எம்.ஏ. பரீட்சை இருக்கிறது...' என்று அம்மா இழுத்த போது எனக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது! பிறகு ஒருவாறு இறங்கி வந்து, ஒரு பேப்பரை மட்டும் பிற்பாடு எழுதிக் கொள்ளச் சம்மதித்தார்!

எனக்கு இரண்டாவது குழந்தை பிறந்த போது அம்மா பி.எட். படித்துக் கொண்டிருந்தார்! காலையில் மூன்று மணிக்கே எழுந்து வீட்டு வேலைகளை முடித்து, எனக்கும் குழந்தைக்கும் வேண்டியவற்றைச் செய்து கொடுத்து விட்டு, குடையும் ஹாண்ட் பாக்குமாக நேரடிப் பயிற்சி வகுப்புக்குக் கிளம்பி விடுவார்.

வேடிக்கை என்னவென்றால், நான் படித்த பள்ளிக் கூடத்தில்தான் அம்மாவுக்குப் பயிற்சி. வகுப்புகள் நடத்திக் காட்ட வேண்டும். அவரைப் பார்த்த என் பழைய ஆசிரியைகள், நான் மாணவியாக இருந்த காலத்தில் அம்மா அவர்களிடம் வந்து சந்தேகம் கேட்டும் அவர்கள் தப்புகளைச் சுட்டிக்காட்டியும் விவாதித்ததை நன்றாக ஞாபகம் வைத்துக் கொண்டிருந்தார்கள்! 'அடடே! அதே மாமியா...?' என்று ஆச்சரியப்பட்டார்கள்.

பி.எட். பரீட்சையில் ஒரு இண்டர்வியூ தேர்வும் உண்டு. அதில் அம்மா பதிலளித்ததைக் கேட்ட பேராசிரியர்கள் அசந்து போய் "நீங்கள் எந்தப் பள்ளியில் வேலை செய்கிறீர்கள்?" என்று கேட்க, அம்மா 'தாம் இதுவரை வேலைக்கே போனதில்லை' என்று சொல்ல, அவர்கள் மேலும் அசந்து போனார்கள்!

அப்பா, கல்லூரிப் பேராசிரியர் வேலையிலிருந்து ரிடையரானார். அம்மா வேலைக்குப் போக ஆரம்பித்தார். நான்கு வருடங்கள் ஒரு பள்ளியில் அசிஸ்டண்ட்






ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாக வேலை செய்தார். அந்த நான்கு வருடங்களும் அப்பா மிகவும் குஷியாக வீட்டுப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். காய்கறி நறுக்கித் தந்து, அம்மா கூப்பிட்ட குரலுக்குப் பதில் சொல்லி, பாத்திரங்களைத் துடைத்து வைத்து... ஏதோ தியாகம் செய்வது போலன்றி மிக இயல்பாக இந்தப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டார் என்பதுதான் முக்கியம். ''எனக்கு இதுலதான் job satisfaction அதிக மாக் கிடைக்குது...'' என்று வேறு சொல்லு வார்!

பள்ளி வேலையை விட்ட பிறகும் அம்மா வீட்டில் வகுப்புகள் நடத்துகிறார். வித்தியாசமான வகுப்புகள் - தெரு முனையில் சைக்கிள் ஷாப் வைத்திருக்கும் பையன் 'இங்கிலீஷில் பேசக் கற்றுக் கொடுங்கள்' என்று அம்மாவிடம் வருகி றான். ஆப்பிரிக்காவிலிருந்து மேல் படிப் புக்காகச் சென்னை வந்துள்ள மாணவன் ''ஹிந்தி சினிமா புரிந்து கொள்ளும் அள வுக்கு எனக்கு ஹிந்தி சொல்லிக் கொடுங்க...'' என்கிறான். இப்படி சிலர் இன்று அம்மாவின் மாணவர்கள்!

இப்படிப்பட்ட வித்தியாசமான அப்பா, அம்மாவின் அருமை பெருமை இப்போதுதான் முழுசாகப் புரிகிறது. நானும் ஒரு தாயாகி விட்ட நிலையில் என் அம்மாவின் முயற்சிகளுடைய அர்த்தத்தை யும் ஆழத்தையும் உணர முடிகிறது. வேலைக்குப் போய்ச் சம்பாதிக்க வேண் டும், வீட்டுப் பெயர்ப் பலகையில் பெயரு டன் அரை டஜன் பட்டங்களைப் போட்டுக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் ஆசை கள் இல்லாமல் தன் சந்தோஷத்துக்காகத் தன்னை மேம்படுத்திக் கொள்ள மட்டுமே ஒருவர் படிக்கலாம், பட்டம் பெறலாம் என்று அம்மா வாழ்ந்து காட்டியிருக்கிறார்.

என் தோழிகள் என்னைச் சந்திக்கும் போது ''நீ எப்படி இருக்கிறாய் என்று கேட்பதில்லை. உன் அம்மா இப்போது என்ன படிக்கிறார்...?'' என்றுதான் கேட்கி றார்கள்! நானும் அவர்களிடம் ஒவ்வொரு முறையும் வித்தியாசமான பதிலைச் சொல் லுகிறேன்!

சமீபத்தில் அம்மாவைப் பார்க்கப் போன போது சமஸ்கிருத பரீட்சைக்குக் 'கம்பைன்ட் ஸ்டடீஸ்' பண்ண தம் தோழி வீட்டுக்குப் போயிருந்தார். என் குழந்தை கள் சொல்கிறார்கள் : ''பாட்டி! பரீட்சை யைப் பார்த்து நல்லா எழுது; இல்லைன்னா எங்க ஃப்ரெண்ட்ஸெல்லாம் எங்களைக் கேலி பண்ணுவாங்க...!''

அட்டை வண்ணப்படமும்
படங்களும் : கோபிநாத்

# சிங்கப்பூரில் கமல் ஷோ!

கமலஹாஸனுக்கு மைக்கேல் ஜாக்ஸன் ஆகிற ஆசை. விளைவு - நாற்பது நாள் சிங்கப்பூரில் 'கமல் ஷோ' என்று மேடை ஏறி ஆடிப் பாடி வெற்றி கரமாக மெட்ராஸ் திரும்பியிருக்கிறார். வந்த சூட்டோடு பத்திரிகையாளர்களை அழைத்து, நிகழ்ச்சிகளிலிருந்து சில பகுதிகளை வீடியோ மூலம் போட்டுக் காண்பித்தார்.

நிகழ்ச்சியை விட, அதற்கு அவர் எடுத் துக் கொண்ட பிரயத் தனங்கள் பிரமாதமாக இருந்தன - கவனிக்க.

ஆர்ட் டைரக்டர், கேமரா மேன், லைட் டிங், காஸ்ட்யூம், எடிட்டர், டான்ஸ் மாஸ்டர் இப்படியாக ஒரு கோஷ்டியே அவ ரோடு சிங்கப்பூர் போயிருக்கிறது. (''தூக்க கொண்டு போன பொருட்கள் மட்டுமே ஒன்னரை டன்'' - கமல்.)

நிகழ்ச்சியை அரைமணி பார்த்ததில் குறிப்பிடத் தோன்றுபவை இவை :

1. சரிகா கமல்ஹாஸனின் அபார மான ஆடை அலங்காரம். அந்தப் பட்டு வேஷ்டி, தரையில் புரள கமல் வருகிற போது நமக்கே விஸிலடிக்கத் தோன்று கிறது.

2. சினிமாவில் செய்வது வேறு; ஸ்டேஜில் 'அப்பு' டான்ஸ்! பிரமிப்பின் உச்சம்.

3. லைட்டிங்.

4. ஸ்ருதி கமலஹாஸனின் கருதி பிச காத 'அம்மாவும் நீயே'.

நிகழ்ச்சியை அந்த ஊர் டீவிக்காரர் களுக்குப் படமெடுக்க அனுமதிக்கவில் லையாம். இவர்களே ரெக்கார்டு பண் ணிக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

கூடிய சீக்கிரம் மெட்ரோவில் 'நாலா வது வரிசையில் தெரிகிற நரைத்த தலை யாருடையது?' என்கிற பரிசுப் போட்டி யுடன் ஒளிபரப்பாகலாம்?

- பியார்

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது. மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்.
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.



வா... வா...
பழனி தேர்தல்ல, வாக்காளர்களுக்கு
குடுத்தே? தேர்தலையே ரத்து பண்றேன், பாரு!
சேஷன்


ஐ.ஏ.எஸ். அதிகாரி அனிதா சௌத்ரி மேலே நடவடிக்கை எடுக்கப் போறியா இல்லையா?

என்னய்யா கவர்னர் நீ? முதல்வரை நேரம் கேட்டுட்டு, பிரதமச் செயலாளர்கிட்டப் போய் தர்பார் நடத்துறியே?...
சென்னா ரெட்டி

என்ன மந்திரியா நீ? கவர்னர்கிட்ட காட்ட வேண்டிய மரியாதை கூடத் தெரியலையே? உன்னை டிஸ்மிஸ் செய்யணும்!


சொன்ன பேச்சைக் கேட்காத கரடியை சுட்டுத் தள்ளிட்டேன்!
ருஷ்ய நாடாளு- மன்றம்




# கல்கி



1993
அக்டோபர் 3
மலர் : 52
இதழ் : 10
ஸ்ரீமுக
புரட்டாசி 17

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# 'ராம்போ' சேஷன்!

ஆங்கிலப் படம் பார்ப்பவர்களுக்கு "ராம்போ" என்ற பெயர் இன்று பழகிய ஒன்று. ஆளுயர மிஷின்கன்னுடன், குன்றெனப் புடைத்தெழும் தசைக் கோளங்களுடன், திரையில் தோன்றும் ராம்போ, புஜபல பராக்கிரமத்துக்கு எடுத்துக்காட்டு. 'தீமைகளை எதிர்க்கும் இந்தத் துணிச்சல், துப்பாக்கி பிடித்தால் மட்டும்தான் தோன்ற வேண்டும் என்பதில்லை; மனத்தளவில் இருந்தாலே போதும்' என்றுதான் காந்தி நமக்குக் கற்றுத் தந்தார். இன்றைய இந்தியாவில் திரும்பின திக்கெல்லாம் வன்முறை அநீதிகளும், சட்ட-விதிமுறைகள் மீறலும், லஞ்ச ஊழலும், மெஜாரிட்டி அளிக்கும் பலத்தில் அதர்மமும் மலிந்து விட்ட நிலையில், 'தப்பு நேர்ந்தால் தட்டிக் கேட்பேன்' என்று கூறிக் கொண்டு ஒரு தேர்தல் அதிகாரி முதுகெலும்புடன் நிமிர்ந்து நிற்பதே மகிழ்ச்சி தருகிறது. இன்னும் நாலு பொதுத் தேர்தல்களுக்கேனும் சேஷன் போல் நாலு அதிகாரிகள் செயல்பட்டால்தான் அக்கிரமத்தையே அறநெறியாக்கி விட்ட நமது அரசியல்வாதிகள் வழிக்கு வருவார்கள்.

'ராம்போ' சேஷனின் நடவடிக்கைகள் பவர்கட் போல செயல்பட்டு, தேர்தல் இயந்திரம் அடிக்கடி நின்று போகுமாறு செய்கிறது என்பதென்னவோ உண்மைதான். ஆனால் தேர்தல் இயந்திரத்தின் ஓட்டத்தினிடையே ஸ்பானரை நுழைத்து, அதைப் பழுதாக்கி விடுகிற அரசியல்வாதிகள் இருக்கும் போது, ஆபத்து அணுகும் நேரத்தில் மெயின் ஸ்விட்சை அணைப்பதற்கும் ஒருவர் தேவைதானே!

ராணிப்பேட்டை தேர்தலில் அ.தி.மு.க. வெற்றி பெற்று விட்டதால் 'ஜெ' ஆட்சியில் நடந்துள்ள தவறுகள், குற்றங்கள், லஞ்ச ஊழல்கள் ஆகிய எல்லாவற்றையும் மக்கள் மன்னித்து விட்டார்கள் என்று பொருள் இல்லை; பழனியில் ஒருவேளை தோல்வி ஏற்பட்டு விட்டால் ஜெயலலிதாவிடம் தமிழக மக்கள் அனைவரும் நம்பிக்கை இழந்து விட்டதாகவும் அர்த்தமில்லை; ஆட்சி மாறி விடப் போவதுமில்லை. இடைத் தேர்தல் என்பது, மக்களின் எண்ணத் துடிப்பை நாடி பிடித்துப் பார்க்க உதவும் ஒரு சம்பவம்; அவ்வளவே. இதைப் பெரிய கௌரவப் பிரச்னையாக எடுத்துக் கொண்டு 'வென்றே தீர வேண்டும்' என்ற பிடிவாதத்துடன் செயல்படும் போதுதான், விதிமுறைகள் மீறப்படுகின்றன; உணர்ச்சிகள் தூண்டி விடப்படும் போது பெரும் குற்றங்களும் நடக்கின்றன.

ராணிப்பேட்டையில் பாட்டாளி மக்கள் கட்சி வேட்பாளர் போலீஸாராலேயே தாக்கப்பட்டது, 'ஜெ' அரசுக்குப் பெரிய களங்கமே. தேர்தலை யுத்த களமாக எண்ணாமல், ஸ்போர்ட்ஸ் ஸ்டேடியமாக நினைத்தால், இந்த மனப்பான்மையை அ.தி.மு.க. தனது தொண்டர்களிடம் வளர்த்திருந்தால், கலைஞரின் வேன் தீக்கிரையாகியிராது. கள்ள வோட்டுப் போடப் போனவரைப் பிடிக்க முற்பட்ட ஆற்காடு வீராசாமியின் கார் நொறுக்கப்பட்டிருக்காது. பழனி யில் குளுகுளு கார் உள்பட ஏராளமான வாகனங்களில் வாக்காளரை அழைத்து வரும் அநீதியை அ.தி.மு.க. நிகழ்த்தியிராது.

நடந்ததற்கு வருந்துவது என்பது குற்றத்தை ஒப்புக் கொண்டதாகி விடும் என்பதால் மறுப்புத் தெரிவிக்க வேண்டிய நிர்ப்பந்தமும் உண்மைகளைத் திரித்துப் பேச வேண்டிய அவசியமும் உண்டாகிறது. தட்டிக் கேட்கும் ஆளுநரையும் தேர்தல் கமிஷனையும் தாக்கிப் பேசுகிற தவறைச் செய்ய வேண்டியதாகிறது. இவையெல்லாம் அ.தி.மு.க. கட்சிக்கும் அதன் தலைவருக்கும் தலைகுனிவையே ஏற்படுத்துகின்றன.

அதர்மப் போக்கினால் பெறக்கூடிய கறை படிந்த வெற்றியை விட, தார்மிக பலத்துடன் அடைகின்ற தோல்வி சாலச் சிறந்தது என்பதை அ.தி.மு.க. தலைவர் உணர்தல் வேண்டும்.

# நமது நாட்டில் மட்டுமே நடக்கக்கூடிய விபரீதம்!

◆ தலையங்கம் 'கோடி' பெறும். இன்னொன்றையும் சேர்த்துக் கொள்ளுங்கள். செயல்பாடு சரியில்லாத எம்.எல்.ஏ. எம்.பிக்களை திரும்பப் பெறும் உரிமையும் தொகுதி மக்களுக்கு வழங்கப்பட வேண்டும்! சுயசிந்தனையோ படிப்பு வாசனையோ இல்லாத பேட்டை ரவுடிகளும் மக்கள் பிரதிநிதிகளாக வர முடிவது நமது நாட்டில் மட்டுமே நடக்கக்கூடிய விபரீதம்!

திருச்சி - 14, சையத் அலி.

◆ இந்திய ஜனநாயகம் வெற்றிகரமாகச் செயல் படவும் கட்சிகள் சிறப்பாக இயங்கவும் இரு கட்சி ஆட்சிதான் சிறந்த ஜனநாயகமாக அமைய முடியும் என்றெல்லாம் அருமையான யோசனைகளைத் தலையங்கத்தில் எழுதி விட்டு, "போகாத ஊருக்கு வழி" என்று தலைப்புத் தந்திருப்பதுதான் சரியில்லை. ஏனெனில் தலையங்க யோசனைகளைக் கட்சிகள் நடைமுறைப்படுத்தவில்லை யென்றால் பொது மக்கள் பொங்கியெழுந்து விட்டால் அவை தானாகவே நிறைவேறி விடும் என்பது எனது எண்ணம்.

பெங்களூர், ப. மூர்த்தி.




◆ 'ராணி - முதல் போணி!' என்ற கட்டுரையில் தி.மு.க.வுக்கு வெற்றி முதல் போணியா? அல்லது அ.தி.மு.க.விற்குத் தோல்வி முதல் போணியா? அல்லது ஒன்றுமே இல்லாத காங்கிரஸுக்கு டெபாசிட் காலியாகும் முதல் போணியா என்பது பற்றிக் கூறவில்லையே! தேர்தல் முடிவு தெரிவிக்குமோ!

மதுரை - 16, ஆர். கார்த்திகேயன்.

◆ அரசு நூலகங்களில் இருக்கக் கூடாத சில இதழ்களின் வரிசையில் கல்கியையும் சேர்த்து விட்டது குறித்த கேள்விக்குத் தராசின் பதில் மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது. வாரந்தோறும் கல்கியை நூலகத்தில் படித்து வரும் என்னைப் போன்ற வாசகர்கள் இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு கா'ட உயிரை விடவும் தயாராக இருக்கிறோம்!

அதிராம்பட்டினம், கண். சிவகுமார்

(அதெல்லாம் எதற்கு சார்? அரசு நூலகங்கள் வாங்காவிட்டாலும் நாங்கள் வாங்குவோம் என்று உங்களைப் போன்ற வாசகர்கள் உறுதி பூண்டாலே போதும். அரசின் நோக்கம் நிறைவேறாது போகும். -ஆர்.)

◆ முன்பு சுவிசேஷில் சாய்ந்துக் கொண்டிருக்கும் வயதானவர்கள் படிக்கும் புத்தகம் எனக் கல்கியை வர்ணித்த 'ஜெ', இப்போது அரசு நூலகங்களில் கல்கியை நுழைய விடாமல் தடுக்கிறார் என்றால்... அவருக்கு 'என்னவோ' ஆகி விட்டதாகத்தானே அர்த்தம்?

சேலம் - 9, மு. இரவிச்சந்திரன்.

◆ ஒரு பொய் சொல்லப் போக, அது எவ்வளவு பெரிய பொய்களுக் (விபரீதங்களுக்)கெல்லாம் வழிவகுக்கும் என்பதை நகைச்சுவை மேலோங்கச் சொல்லப்பட்ட விதம் (பொய்யானாலும் புருஷன்) அருமை. இரட்டை அர்த்த வசன (விரசம்) இல்லாது நல்ல ஹாஸ்யத்தோடு எழுதிய கிரேஸி மோகன் பாராட்டுக்குரியவர்.

திருச்சி - 8, மா. நளினி.

◆ சைலண்ட் ஜோக்ஸ் really superb!

லால்குடி, எம். இராஜேந்திரன்.

◆ அட்டையில் ஆரம்பித்த கலகலப்பு, கடைசி பக்கம் வரை இருந்தது. அதிலும் எஸ்.வி. சேகர் எழுதிய தத்துவப் பாட்டு வயிற்றுவலியை உண்டாக்கி விட்டது!

சேலம் - 1, கே. ராஜபாலு.

◆ "தத்துவம் படும் பாடு" 'விவேக்'கின் விகடப் பாட்டு விழுந்து விழுந்து சிரிக்க வைத்தது.

வேட்டைக்காரன்புதூர், பி. ஜெயப்பிரகாஷ்.

◆ உண்மையிலேயே தரமுள்ளதொரு நகைச்சுவைச் சிறப்பிதழாகக் கொணர்ந்தமைக்கு எனது பாராட்டுக்கள். சிரித்துச் சிரித்து வயிற்றுவலி வந்தது. இலவசமாக ஒரு வயிற்று வலி மருந்து சாஷேயும் அளித்திருக்கலாம்!

மருங்கூர், பால. கிருஷ்ணமூர்த்தி.

◆ அட்டைப் படம் வெகு ஜோர். அசத்தி விட்டீர்கள்! இதையும் தூக்கிச் சாப்பிட்டு விட்டன நடுப்பக்கத்திலுள்ள தத்துவம் படும் பாடு பாடல்கள்!

பெரியசெவலை, ம. பாபு.

◆ 'மக்களால் மக்களுக்காக' - சிறுகதை சிறப்பு. உண்மை பேசும் மக்களுக்கு என்ன கதி கிடைக்கும் என்பதை லிங்கமநாயக்கர் மூலமாக அருமையாக உணர்த்தி விட்டார் அறிமுக எழுத்தாளர் எஸ்.வி. பாராட்டுக்கள்.

கோவை - 16, ரம்யா.

# பணமிருக்கிறது; மனம்தான் இல்லை!

கண்ணாடி, பீங்கான் ஆகியவற்றின் உற்பத்தியின் போது, அவைகளைப் பளபளக்க வைக்கப் பயன்படுவது போரக்ஸ் எனப்படும் ரசாயனம். இது மட்டுமல்லாமல், பெயிண்ட், மற்றும் உரத் தயாரிப்பிலும் இந்தப் பொருள் தேவைப்படுகிறது. மிக முக்கியமாகத் தங்கம், வெள்ளி, பித்தளை, செம்பு ஆகிய உலோகங்களில் உள்ள அழுக்கை நீக்கி, அந்த உலோகங்களைப் பளபளக்க வைக்கிறது போரக்ஸ். தமிழில் இதை 'வெங்காரம்' என்று சொல்கிறார்கள்.

இந்த வெங்காரத்தைத் தயாரிக்கத் தேவையான மூலப் பொருளின் பெயர் போரக்ஸ் பெண்டா ஹைட்ரேட். இது ஒரு வகை இயற்கைக் கனிமம். துருக்கியிலிருந்துதான் வரவேண்டும். அதை இறக்குமதி செய்து அதனுடன், ரசாயனக் கலவைகளைக் கலந்து போரக்ஸ் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆனால், இந்த மூலப் பொருளை இறக்குமதி செய்வதில் இப்போது பிரச்னை! அது என்ன?

''ஒரு வருடத்திற்கு முன்பு வரை போரக்ஸ் உற்பத்தியாளர்களின் தேவைகளைக் கணக்கெடுத்துக் கொண்டு, ஸ்டேட் ட்ரேடிங் கார்ப்பரேஷன் எனப்படும் இந்திய அரசின் நிறுவனமே மூலப் பொருளை இறக்குமதி செய்து கொடுத்தது. ஆனால் இப்போது வந்துள்ள புதிய பொருளாதாரக் கொள்கையின்படி, உற்பத்தியாளர்களே நேரடியாக இறக்குமதி செய்து கொள்ளலாம் என்று அரசு சொல்லிவிட்டது. அங்கேதான் ஆரம்பமானது பிரச்னை!

''நாங்கள் சிறு உற்பத்தியாளர்கள். சரக்கைக் கப்பலில் புக் செய்வதற்கென்று குறைந்தபட்சமாக அளவு ஒன்று உண்டு. அதன்படி சுமார் 9 கோடி ரூபாய் அளவுக்காவது மூலப் பொருள் வாங்கினால்தான் கப்பல் கம்பெனிகளில் சரக்கை புக் செய்வார்கள். எங்கள் தேவையோ வெறும் அறுபது லட்ச ரூபாய்க்குத்தான் வரும். இந்த நிலையில் நாங்கள் என்ன செய்வது? பம்பாயில் உள்ள பெரும் உற்பத்தியாளர் ஒருவருடன் இணைந்து செயல்பட்டு, இறக்குமதி செய்ய வேண்டிய நிலையிலிருக்கிறோம். ஆனால், அவர்கள் இஷ்டப்பட்டால் எங்களைச் சேர்த்துக் கொள்வார்கள். இல்லையென்றால் கழற்றி விட்டு விடுவார்கள். இதன் விளைவு என்னவென்றால், இந்த மூலப்பொருளின் விலையையே அவர்கள் நிர்ணயிக்கும் நிலைக்கு வந்துவிட்டார்கள்! செயற்கையான ஒரு பற்றாக்குறையைக் கூட அவர்களால் உண்டாக்க முடியும்! ''இந்த நிலை மாற வேண்டும்'' என்கிறார் கும்பகோணத்திலுள்ள போரக்ஸ் உற்பத்தியாளரும் பித்தளைப் பாத்திர உற்பத்தியில் முன்னணியில் இருப்பவருமான சிவசுப்ரமணியன்.

கும்பகோணம் பித்தளைப் பாத்திரங்கள் புகழ்பெற்றவை. அதுவும் கும்பகோணம் குடம், தவலை, ஆகியவை அந்த ஊர் ஸ்பெஷல். ஆனால், இப்போது பித்தளைப் பாத்திரங்களின் விற்பனை மூன்றில் இரண்டு பங்கு குறைந்து போய் விட்டதாம். காரணம், எவர்சில்வரின் ஆதிக்கம்.

''எளிமையாகவும் அதே சமயம் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கும் எவர்சில்வர்தான் சரி என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அதே சமயம் பித்தளைப் பாத்திரங்கள் விலை அதிகமாகவும் புழக்கத்திற்குக்



* குறைந்து வரும் பித்தளைப் பாத்திர விற்பனை...

கொஞ்சம் கடினமாக இருந்தாலும் உடைந்து போனால் கூட மீண்டும் விற்கலாமே. மேலும், ஓர் அவசரத் தேவைக்குப் பித்தளைப் பாத்திரத்தை அடமானமும் வைக்கலாம் என்பதால் ஒரேயடியாக இந்தத் தொழில் நலிந்து போகாது. அதோடு இன்னமும் கல்யாணச் சீர்வரிசைகளின் போது பித்தளைப் பாத்திரங்களைக் கொடுப்பதென்பது ஒரு சம்பிரதாயமாகவும் இருக்கிறதே!'' என்கிறார் சிவசுப்பிரமணியன்.

ஆயினும் இவரைப் போன்றவர்கள் பித்தளைப் பாத்திர விற்பனையை மட்டும் நம்பியிருக்காமல் சினிமா தியேட்டர், லாட்ஜ் என்று வர்த்தகத்தை விரிவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இதற்குப் பதிலாக தொழிற்சாலைகளைத் துவக்கினால், பல பேருக்கு வேலை வாய்ப்புக் கொடுக்கலாமே என்ற கேள்வி எழுகிறது.

இந்தக் கேள்விக்கான பதிலாக, ''இந்தப் பகுதியில் நிறையப் பேரிடம் வசதியிருந்தும், தொழில்கள் துவங்க முன் வர மாட்டார்கள் சார்!'' என்கிறார் தஞ்சை மாவட்ட சிறு தொழிலதிபர்கள் சங்கத் தலைவரான என்.எம். ராமலிங்கம்.

''இன்றிருக்கும், அரசாங்கத்தின் வரித் தொல்லைகள், தொழிலாளர்களின் ஒத்துழையாமை ஆகியவைதான் அவர்கள் பணத்தைத் தொழில்களில் முதலீடு செய்ய விடாமல் தடுக்கிறது. 'பணத்தைப் போட்டால் திருப்பி எடுக்க முடியுமா?' என்ற சந்தேகம் இருக்கிறது. தொழிலில் போடுவதற்குப் பதிலாக வங்கிகளிலும், நிதி நிறுவனங்களிலும் போட்டால், பணமும் பத்திரமாக இருக்கும்; வட்டியும் வரும் என்கிற சூழ்நிலையில் எதற்கு அனாவசியமாக ரிஸ்க் எடுக்க வேண்டும். இந்த மனநிலைதான் இங்கு வசதி கொண்ட பலரிடமும் இருக்கிறது. இதன் காரணமாகத்தான் வேறு எந்த ஊரிலும் இல்லாத அளவுக்கு இங்கே வங்கிக் கிளைகளும் நிதி நிறுவனங்களும் இருக்கின்றன. இன்று மிகப் பிரபலமாகி விட்ட 'சிட்டி யூனியன் பாங்க்' கூட 'கும்பகோணம் சிட்டி யூனியன் பாங்க்' என்கிற பெயரில் இங்கே இரு வங்கிகளின் இணைப்பில் முன்பு உருவானதுதான்'' என்கிறார் அவர்.

ஆனால், ஏ.ஆர்.ஆர் (சீவல்), டி.எஸ்.ஆர். (கோகுல் சாண்டல்), ஹோமியோபதி மருந்துகள் தயாரிக்கும் 'பாஹேரிலா' மருந்துக் கம்பெனி மற்றும் காளிமார்க் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் உற்பத்தி போன்ற - எல்லோருக்கும் தெரிந்து சக்கைப் போடுபோடுகிற - சில விதிவிலக்குகள் இருக்கத்தான் செய்கின்றன. குறிப்பாக ஜயஸ்ரீ கார்மெண்ட்ஸின் உரிமையாளர் ஸ்ரீதர். டஷ்ணப் பகுதியான கும்பகோணத்தில் உல்லன் (கம்பளி) ஸ்வெட்டர் தயாரிக்கும் தொழிற்சாலை வைத்துக் கிட்டத்தட்ட 50 ஏழைப் பெண்களுக்கு வேலை வாய்ப்பையும் கொடுத்திருக்கிறார். 'குடந்தையில் உல்லன் தொழிற்சாலையா?' என்று கேள்வி கேட்டு வங்கிகளும், நிதி நிறுவனங்களும் கேலி செய்து நிதி வழங்காமல் கைவிரிக்க, மனம் தளராமல், சொந்த முயற்சியில் நிதி ஆதாரங்களை ஏற்படுத்திக் கொண்டு, இயந்திரங்களை இறக்குமதி செய்து, அமைக்கிறார். தமிழ்நாட்டிலேயே உல்லன் ஆடைகள் தயாரிக்கும் ஒரே தொழிற்சாலை இவருடையதுதான்.


* சிவசுப்பிரமணியன்


* ராமலிங்கம்

பன்னெடுங்காலமாகச் செய்யப்பட்டு வரும், பித்தளைப் பாத்திரத் தயாரிப்பு, நெசவு ஆகியவை ஒரு சிலருக்கு வேலை வாய்ப்பைக் கொடுத்தாலும் பெருகி வரும் மக்கள் தொகைக்கு ஏற்ப, கும்பகோணத்திலும், அதன் சுற்று வட்டாரங்களிலும், வேலை வாய்ப்பு வசதி ஏற்படவில்லையென்பதுதான் இன்றைய நிலை. தொழில் நுட்பம் படித்த இளைஞர்கள், வேலை தேடி வெளியூர்களுக்குத்தான் செல்கிறார்கள்.

இந்த நிலை மாற, சிறிய, பெரிய தொழிற்சாலைகள் இங்கு நிறையத் தோன்ற வேண்டும். முக்கியமாக விவசாயத்துக்குத் தேவையான கருவிகள் தயாரிக்கும் தொழிற்சாலைகள், விவசாய உற்பத்தியைப் பயன்படுத்திக் கொண்டு இயங்கும் தொழிலகங்கள் என்று இந்தப் பக்கத்தில் ஆரம்பித்தால் நன்றாக இருக்கும். நரிமணத்தில் கிடைக்கும் இயற்கை எரிவாயுவைப் பயன்படுத்தி இயங்குகிற தொழிற்சாலைகளையும் அமைக்கலாம்.

கும்பகோணத்திலிருந்து சுமார் நூறு கி.மீ. தொலைவிலுள்ள ஜெயங்கொண்டத்தில் மிகப் பெரிய நிலக்கரிச் சுரங்கமும், மின்நிலையமும் வர இருப்பது தொழில் துவங்குவோருக்கு மேலும் உபயோகமாக இருக்கும் என்பதிலும் ஐயமில்லை.

- கே. ஆர். ரவிக்குமார், விமலா நாராயணன், ஜானகி கேசவன், பிரசன்னகுமார்



அந்த நெடுஞ்சாலையில் பஸ்ஸை விட்டு இறங்கியதும் கிழவர் கேசவ நாயர் கடையில் ஒரு சிங்கிள் டீ ஸ்ட்ராங்காக குடித்து விட்டு நடந்தே பள்ளிக்குச் செல்வதுதான் என் வழக்கம். இந்தப் பழக்கம் என்னோடு பயணிக்கும் சக ஆசிரியர்கள் சிலருக்கும் கூட தொற்றிக் கொண்டிருந்தது. என்னதான் ஒரு அரைமணி நேரத்திற்கு முன்னர் மனைவி போட்டுத் தந்த காப்பியைக் குடித்து விட்டு வந்திருந்தாலும் நாயர் கடை டீ உள்ளே செல்லவில்லையென்றால் அன்று ஏதோ வீட்டுப் பாடம் செய்திருந்தும் நோட்டுப் புத்தகத்தைக் கொண்டு வராத மாணவனைப் போன்றதொரு மனநிலை இருக்கும். இவ்வளவிற்கும் நாயர் தரும் டீ அவ்வளவு ருசி என்றும் சொல்வதற்கில்லை. ஆனால் நாயரின் சிரித்த முகமும், மலையாளமும் தமிழும் கலந்த அவரது மொழியும் அதற்கொரு சுவையூட்டி, அவர்பால் இனந்தெரியாத ஒரு பாசத்தைப் பல ஆண்டுகளில் ஏற்படுத்தியிருந்தது.

அன்று நான் பஸ்ஸிலிருந்து இறங்கி, டீக்கடை நோக்கி நடந்து கொண்டிருக்கையில், நாயர் கடையில் கண்ட காட்சி துணுக்குறச் செய்தது. ஒரு ஜீப் நின்று கொண்டிருந்தது. இரு போலீஸ்காரர்கள் அவரிடம் ஏதோ லத்தியைக் காட்டி சப்தமிட்டுக் கொண்டிருந்தனர். வாடிக்கையாளர்களின் சிறு கும்பல் வட்டமிட்டிருந்தது. நான் விரைந்தேன்.

''எலேய், கிழவா இன்னும் ஒரு மணி நேரத்துலே கடையை மூடிடணும். இரண்டு நாளைக்குத் திறக்கக் கூடாது. நான் திரும்பி வரப்போ கடை இருந்துச்சுன்னா கீத்து, தட்டியெல்லாம் எகிறிடும் ஜாக்கிரதை.''

சொல்லிவிட்டு விடுவிடு என்று ஜீப்பில் ஏறிச் சென்றனர் காவலர்கள்.

நான் ''என்ன?'' என்று விசாரித்தேன். கண்கலங்க நாயர் கூறினார்.

''எந்தா ஸாரே, ஏதோ மந்திரி வருந்துண்டு போலும், கடை அடைக்கான் பறைந்து. எந்தா செய்யா?''

மத்திய அமைச்சர் ஒருவர் வருவதாகப் பத்திரிகையில் படித்த செய்தி என் நினைவிற்கு வந்தது. அவர் வந்தால் நாயர் ஏன் கடையை மூட வேண்டும்?

''அதற்கு ஏம்பா உன்னை கடையை மூடச் சொல்றாங்க?''

''எனக்கு எந்தா அறியும் ஸாரே? என்ட தெய்வமே குருவாயூரப்பா.''

கிழவர் புலம்பினார். கும்பலில் இருந்த ஒருவர் எனக்குப் பதில் கூறினார்.

''பக்கத்து ஊர்லே பவுடர் பாக்டரி திறக்க மந்திரி வர்றார் சார். இவர் கடை மட்டுமில்லீங்க. அதோ பாருங்க, அங்க இருக்கிற குடிசையெல்லாம் கூட எடுத்திடச் சொல்லியிருக்காங்க.''

நான் பார்த்தேன். அந்த போலீஸ் ஜீப் இப்போது தூரத்தில் சிறு சிறு மணல் மேடுகள் போல் தெரிந்த குடிசைகளின் முன்னே நின்று கொண்டிருந்தது. அந்தப்

புறம்போக்கு நிலத்தில் சில மாதங்களுக்கு முன்னர்தான் அக்கம்பக்கத்தில் கூலி வேலை செய்யும் சில தொழிலாளர்கள் குடிசைகளை அமைத்துக் கொண்டிருந்தனர். தொகுதி எம்.எல்.ஏ., அவர்களுக்கு மனைப் பட்டா வழங்கப் போவதாக வாக்குறுதி அளித்திருந்ததாக வேறு கேள்வி.

''ஞான் எந்து பண்ணும் ஸாரே? எவ்விட ஞான் போவும்?''

நாயரின் கேள்வி என் கவனத்தைத் திருப்பியது. நான் அவருக்கு என்ன சொல்ல? அவர் என்ன செய்வார்? எங்கே போவார்?

நாயருக்குப் பதில் சொல்வதற்கு ஒன்றும் தோன்றாமல் டீ கிளாஸையும், சில்லறையையும் கொடுத்து விட்டுப் புறப்பட்டேன்.

அந்த நெடுஞ்சாலையில் கொஞ்ச தூரம் நடந்து சென்று, அந்தக் குறுகலான மேம்பாலத்தைக் கடந்தால் இடது பக்கம் திரும்பும் மண்சாலையில் சில கெஜ தூரத்தில் இருக்கிறது நான் பணியாற்றும் காமராஜர் அரசு உயர்நிலைப் பள்ளி. சாலையை வெறித்தபடி நடந்து கொண்டிருந்தேன். தூரத்தில் பாலத்தின் இறக்கத்தில் ஆட்கள் சிலர் வேலை செய்து கொண்டிருப்பது தெரிந்தது. அங்கே அவர்கள் என்ன செய்யக்கூடும்? அவர்களை நான் நெருங்கவும் புலப்பட்டது.

ஏழெட்டுப் பேர் நங்கு நங்கென்று கடப்பாறைகளால் சாலையில் அமைக்கப்பட்டிருந்த வேகத் தடையைத் தகர்த்துக் கொண்டிருந்தார்கள். இதுவும் அமைச்சரின் வருகைக்காகத்தான் போலும், எதற்கும் கேட்டுப் பார்த்தேன்.

''ஏம்பா. இதை இடிச்சுக்கிட்டிருக்கீங்க? இப்பத்தானே கட்டினது.''

''யாரோ, பெரிய மந்திரி இந்த வழியா வரப் போறாராம் ஸார், இடிக்கணுமாம்!''

நினைத்தது சரிதான்.

அந்த வேகத்தடை வெகு சமீபத்தில் தான் கட்டப்பட்டது. அந்த மேம்பாலம் மிகவும் குறுகலாக இருப்பதால், விபத்துக்களைத் தவிர்க்கும் பொருட்டு அமைக்கப்பட்டது. பல விபத்துகளுக்குப் பிறகு, அதுவும் சமீபத்தில் நடந்த ஒரு சுற்றுலாப் பேருந்தும் மணல் லாரியும் எதிரும் புதிருமாக மோதிக் கொண்டு பலத்த உயிர்ச்சேதம் ஏற்பட்ட கோர விபத்திற்குப் பிறகு, பலருடைய புகார்களின் பேரில் கட்டியது. அதற்கு அடிக்கப்பட்ட கறுப்பு மஞ்சள் பூச்சுகளின் பளபளப்பு இன்னும் மாறவில்லை. தூரத்திலிருந்து பார்ப்பதற்கு அந்த வேகத் தடைக் கோடுகள், புலி ஒன்று பல குட்டிகளோடு படுத்துக் கொண்டிருப்பதைப் போன்று அழகாக இருக்கும். பாலத்தின் இருபுறத்திலும் அதைப் பல நாட்கள் சிரமப்பட்டு கான்கிரீட் போட்டு அமைத்திருந்தார்கள். அந்த வேகத் தடைக்கென்று ஓர் அறிவிப்புப் பலகையும், இரவில் தெரிவதற்கென்று பதிக்கப்பட்ட ஒளிரும் சிவப்பு ஸ்டிக்கர்கள் எல்லாமும் உண்டு. அனைத்தும் தவிடுபொடியாகிக் கொண்டிருந்தன. அமைச்சரின் வாகனம் சீராக வேகம் குறையாமல் செல்ல வேண்டும் என்ற காரணத்திற்காக.

நான் யோசித்தபடி நடந்து கொண்டிருந்தேன்.

வரப்போவது யார்? நமது அமைச்சர்தானே. அவர் மத்தியில் இருந்தால் என்ன? மாநிலத்தில் இருந்தால் என்ன? இந்த ஊருக்கும், இந்த வீதிக்கும் இந்த வேகத் தடைக்கும் கூட அவர்தானே அமைச்சர். இந்த டீக்கடை, குடிசைகள், அனைத்தும் அவர் பரிபாலிக்கும் ராஜ்யத்தில் உள்ளவை தானே? அவர் கண்களில் அவை படக் கூடாதோ? அவரிடமே ஏன் இந்த கண்ணா மூச்சு விளையாட்டு? அவரைத் தேர்ந்தெடுத்த மக்களின் வாழ்க்கை முறையையும், அவர்களின் வசதிகளையும் அவர் தானே கவனிக்க வேண்டும். அவர் கண்களுக்கே அவை மறைக்கப்படுவது என்ன நியாயம்? அந்த வேகத் தடைக்காக

# வேகத் தடைகள்

புதுவை அரிசுதா

அவரது வாகனம் சற்று நின்று நிதானமாகச் சென்றால் என்ன நேர்ந்து விடும்? அமைச்சராகி விட்டதால் அவர் அன்னிய தேசத்தவராகி விட்டாரா? ஏதோ அவருக்கு அடிமைப் பட்டுக் கிடக்கும் ஒரு நாட்டில் அவர் உலா வருவது போன்றும், அவர் வழங்கும் மான்யத்தில் நாடு பிழைத்துக் கொண்டிருப்பதைப் போன்றும், அவருக்கு ராஜமரியாதையும் உபசரிப்பும் தேவையென்பது போலவும், என்ன போலித்தனம் இது?

சொந்த வீட்டில் வசிப்பவரே தன் வீட்டு ஒட்டடை உடைசல்களைத் தன் கண்களுக்குத் தெரியக் கூடாது என்று மறைத்துக் கொண்டாரானால், வீடு என்னாவது? என்று தான் பழுதுபார்ப்பது? வாடகை வீட்டில் வசிப்பவர்களாவது வீடு உடையவர் வருகிறார் என்றால், 'ஏன் ஆணி அடித்தீர்கள்? ஏன் இங்கே மாட்டைக் கட்டினீர்கள்? மரம் நட்டீர்கள்?' என்று ஏதாவது கேட்பாரென்று அதை இதை நகர்த்தி மறைக்கப் பார்ப்பார்கள். நாமும் என்ன அப்படியா? நாமென்ன குடித்தனக்காரர்களா? குடிமகன்களா? அமைச்சரும் நம்மைப் போன்ற குடிமகன்தானா அல்லது அவரது சொந்த தேசத்தில் நாம் குடியேறிய அகதிகளா? மக்களின் துயர் தீர்க்க வேண்டியவர்களே அவர்களைத் துயரடையச் செய்தால் எங்கே முறையிடுவது?

வேதனையோடு பள்ளியை அடைந்தேன்.

அன்று முழுவதும் என் கண்முன்னே நாயரும் அந்த குடிசைகளும், கறுப்பு மஞ்சள் கோடு போர்த்திய வேகத்தடையும் மாறி மாறித் தோன்றியவண்ணம் இருந்தன.

எங்கள் பள்ளிக்கு வருகிற வாரத்தில் மாவட்ட கல்வி அலுவலர் வருகைபுரிய இருப்பதால் அதற்கான ஸ்டாப் மீட்டிங்கை தலைமையாசிரியர் அன்று ஏற்பாடு செய்திருந்தார். மாலையில் கூட்டம் ஆரம்பமானது. தலைமையாசிரியர் எங்களுக்குச் சில கட்டளைகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தார்.

''சென்ற ஆண்டு மிகவும் சிறப்பாக நம் பள்ளியைப் பள்ளிக் கல்வி அலுவலர் குறிப்பேட்டில் குறித்திருக்கிறார் என்றும் இவ்வாண்டும் அது போல் அவரது நன்மதிப்பைப் பெற ஆசிரியர்கள் ஒத்துழைக்க வேண்டும் என்றும் ஆரம்பித்தவர், ஆசிரியர்களிடமும் பல ஆலோசனைகளைக் கேட்டார். அவர்களும் வழங்கினர். ஒட்டுமொத்தமாகச் சில செயல்முறைகள் வரையறுக்கப்பட்டன.

அதாவது, இன்ஸ்பெக்ஷன் அன்று மட்டுமாவது அனைத்து மாணவர்களையும் துவைத்துச் சலவை செய்த சீருடையை அணிந்து வரச் செய்ய வேண்டும். தலையைப் படிய வாரிச் சுத்தமாக வைத்திருக்கச் சொல்ல வேண்டும். வகுப்பறைகளில் ஒட்டடை அடித்துக் காரை பெயர்ந்து போன இடங்களையெல்லாம் தேசப்படம், மற்றும் காந்தி, நேரு, இந்திரா, ராஜீவ் போன்ற தேசத் தலைவர்கள் மற்றும் பௌதிக, இரசாயன வரைபடங்களை மாட்டி மறைக்க வேண்டும். உடைந்த டெஸ்குகளையெல்லாம் பின்னுக்குத் தள்ளி விட்டு, முன்வரிசைகளில் நல்லவற்றைப் போட்டு, பளபளப்பாக வைக்க வேண்டும். அழகிய கையெழுத்துள்ள மாணவர்களின் கட்டுரை நோட்டுகளைக் கட்டுகளின் மேல் வைத்துக் கட்ட வேண்டும். நன்றாகப் படிக்கும் மாணவர்களை முன்வரிசைகளில் அமர்த்த வேண்டும். குறிப்பாகப் பலமுறை நடத்தி ஒத்திகை பார்த்த பாடங்களையே அன்று வகுப்பில் நடத்த வேண்டும். அவர் வரும் நேரத்தில் ஏற்கெனவே ஒத்திகை பார்த்தபடி அந்தந்த மாணவர்களைப் பார்த்து அந்தந்த வினாக்களைக்* கேட்க வேண்டும்.

இன்னும் ஊராரிடம் கொஞ்சம் நிதி வசூலித்து, சாய்ந்து போன கொடிக் கம்பத்தைச் செப்பனிட்டு, புது தேசியக் கொடியொன்று வாங்க வேண்டும். ஒழுகும் தண்ணீர்க் குழாயைப் பழுதுபார்க்க வேண்டும். மறைவில்லாத சிறுநீர் கழிப்பறையைத்

## அருள்வாக்கு

வெளி வஸ்துக்களிலிருந்து நமக்கு ஆனந்தம் வரவில்லை. நம்மிடமிருந்தே தான் ஆனந்தம் பிறக்கிறது. நமது உண்மை ஸ்வரூபமான ஆனந்தத்தை நாம் அஞ்ஞானத்தினால் மூடி மறைத்துக் கொண்டிருக்கும் நிலையில் கூட, 'நம்முடையது' என்று ஒன்றிடம் சம்பந்தம் வைக்கும் போது தான் அதிலிருந்து ஆனந்தத்தை அடைகிறோம். அந்தச் சம்பந்தம் போய் விட்டால் ஆனந்தம் போய் விடுகிறது. உதாரணம் சொல்கிறேன் : ஒருவருக்குச் சொந்தமாகக் கொஞ்சம் நிலம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதில் முதலில் வருஷத்துக்கு வருஷம் விளைச்சல் அதிகமாவதாக வைத்துக் கொள்ளுங்கள். 'இந்த வயல் என்னுடையது' என்பதால், விளைச்சல் அதிகமாகும்போதெல்லாம் அவருக்கு மனம் குளிருகிறது. ஆனந்தம் உண்டாகிறது. அப்புறம் விளைச்சல் குறையத் தொடங்குகிறது. வயலை வேறு ஒருவருக்கு விற்றுச் சாசனம் பண்ணி விடுகிறார். மறுபடி அடுத்த வருஷம் அதே வயலில் ஏகமாக விளைச்சல் கூடியிருக்கிறது. இப்போது அதைப் பார்க்கும் போது இவர் மனம் குளிரவா செய்கிறது? 'அடடா, போன வருஷம் நம் கையில் இருந்த போது தரிசு மாதிரி பொட்டலாக இருந்தது; இப்போது எவனோ ஒருத்தனுக்கு அதிருஷ்டம் அடிக்கிறதே!'



என்று வயிற்றெரிச்சல்தான் உண்டாகிறது. 'எனது' என்ற சம்பந்தம் இருந்த மட்டுந்தான் அமோக விளைச்சலில் சந்தோஷம் இருந்தது; பிறகு அதே விளைச்சலில் உணர்ச்சி அடியோடு மாறி விட்டது.

மாயைக்கு ஆளான 'நான்' என்பதன் சம்பந்தத்துக்கே இத்தனை ஆனந்தம் இருக்கிறது என்றால், எதிலும் சம்பந்தப் படாமல் பூரண ஞானமாக இருக்கின்ற அந்த வெறும் 'நான்' எத்தனை ஆனந்தமயமாயிருக்கும்! வெல்லம் போட்டால் கசப்புப் பாகற்காய்க் கறியிலும் சிறிது தித்திப்பு இருப்பதை உணர்கிறோம். வெல்லத்தின் சம்பந்தத்துக்கே தித்திப்பு இருப்பதால், வெல்லம் தித்திப்பு மட்டுமே என்பதில் சந்தேகம் என்ன? கசப்பான துக்க உலகத்தில் 'நான்' என்பதின் மாயக்கிரணங்கள் சம்பந்தப்படுகிற போதே அதில் தித்திப்பு ஆனந்தத்தைப் பெறுகிறோம் என்றால், அந்த 'நான்' மட்டுமே ஸ்வச்சமாக நிற்கிற போது எத்தனை தித்திப்பாக ஆனந்தமயமாக இருக்க வேண்டும்? சிறிய பொத்தல்கள் கொண்ட ஒரு சட்டியால் ஒரு தீபத்தை மூடி வைத்தால் துவாரங்கள் வழியாக மெல்லிய ஒளிக் கிரணங்கள் வெளி வரும். மாயையால் மூடப்பட்ட ஆத்ம தீபத்திலும் இந்திரிய துவாரங்கள் வழியாகக் கொஞ்சம் கொஞ்சம் ஆனந்த ஒளியைப் பார்க்கிறோம். மாயச் சட்டியை உடைத்து விட்டால் ஆனந்த ஜோதிர்மயமாகவே ஆகி விடலாம். துவாரங்களின் அளவைப் பொறுத்துப் பல வேறு அளவுகளில் ஒளி வெளிவந்தாலும் உள்ளேயிருப்பது ஏகஜோதிதான். நாம் மாயச் சட்டியை உடைத்து விட்டால் உலகத்தில் பார்க்கும் வித்தியாசங்களெல்லாம் மறைந்து, எல்லாம் ஒன்றான ஆனந்த ரூபமாகவே தெரியும்.

இந்த 'ஞானம்', 'ஆனந்தம்', 'நாம்' என்பதெல்லாமே ஒன்றுதான். நாம் உண்மையில் யார் என்பதை உணரும் ஞானம் வரும் போது, நாமே ஞான மயமான ஆனந்தம் என்று கண்டுகொள்வோம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தட்டி வைத்து மறைக்க வேண்டும். அன்று மட்டுமாவது மதிய உணவில் இரண்டொரு காய்கறிகளைப் போட வேண்டும், - இப்படி பலப்பல யோசனைகள் அடுக்கப் பட்டுக் கொண்டிருந்தன.

நான் யோசித்தேன்.

ஓர் அமைச்சரின் வருகைக்கு அரசியல்வாதிகள் செய்வதற்கும், ஒரு கல்வி அலுவலரின் வருகைக்குத் தலைமை ஆசிரியர்கள் செய்யும் ஆர்ப்பாட்டத்திற்கும் ஒன்றும் அதிக வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை.

தவறு எங்கே இருக்கிறது என்று எனக்குப் புரிய ஆரம்பித்தது. தவறு அரசியல்வாதிகளிடம் மட்டுமில்லை. ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களிடமும் இருக்கிறது. இப்படி ஒவ்வொரு மட்டத்திலும் இருக்கிறது. ஆங்காங்கே கானல் நீரூற்றுகளை அமைத்துக் கொண்டு, பாலையைச் சோலையாக்கிக் கொண்டிருக்கிறோம் என்னும் மாயையில் நம்மை நாமே மறைத்துக் கொண்டிருக்கிறோம், மகிழ்ந்து கொண்டிருக்கிறோம்.

புள்ளி விவரங்களைச் சாதுர்யமாக ஜோடித்துக் காட்டியே வளர்ச்சியடைந்து விட்டதாக மார்தட்டிக் கொண்டிருக்கிறோம். தெருவுக்குப் பத்துப் பேர் படிக்கத் தெரியாதவர் இருந்தாலும் முழு எழுத்தறிவு பெற்று விட்டதாக நம் முகங்களுக்கு மேலேயே முகமூடி போட்டுக் கொண்டிருக்கிறோம்.

இப்படி, போலிகளை நாம் மிகப் பொலிவோடு அமைத்துக் கொள்ளும் இந்த மனப்பான்மைதான் நமது வளர்ச்சியைத் தடைசெய்யும் உண்மையான வேகத் தடைகள். இவை தகர்த்தெறியப்பட வேண்டும்.

கசப்பாக இருந்தாலும் இந்த உண்மைகள் உண்மைகளே என்று எனக்குப் பட்டது.

நான் மௌனமாகவே இருப்பதைக் கண்ட தலைமையாசிரியர்,

''என்ன நீங்க எதுவுமே சொல்லாம இருக்கீங்க, வேற என்ன செய்யலாம்? சொல்லுங்க...'' என்றார்.

நான் எழுந்து, ''ஸார், தாகத்துக்கு நீர்தான் தேவை. கானல்நீர் இல்லே. இதை விடக் கேவலமான முறையில் நம்மை நாமே ஏமாத்திக்க முடியாது!'' என்று சொல்லவும், என்னை முறைத்து விட்டு ஆவேசமாக வெளியேறினார் தலைமையாசிரியர். அநேகமாக எனக்கு ஒரு மெமோ தரப்படலாம்!

# தியாக பூமி

## 9. தீக்ஷிதர் விஜயம்

சங்கர தீக்ஷிதரைப் பார்த்ததும், உட்கார்ந்திருந்த தங்கம்மாள் எழுந்து கொண்டாள். ''உட்காருங்கோ, அம்மா! எனக்கோசரம் எழுந்திருக்க வேண்டாம். ஏதோ பூஜை வேளையிலே கரடியை விட்டடிச்சது மாதிரி நான் வந்தேன்னு நினைக்கக்கப்படாது. எனக்கு நெடுங்கரை. பக்கத்து கிராமத்துக்குக் காரியமாக வந்திருந்தேன். நம் ஊருக்குச் சம்பந்தியா வரப் போறவாளாச்சேன்னு உங்களையும் பார்த்துட்டுப் போகலாம்னு...''

''ஓகோ! அப்படிச் சொல்லுங்களேன்? உட்காரும், நெடுங்கரையா உமக்கு? சம்பு சாஸ்திரிக்கு ஏதாவது உறவு, கிறவு உண்டோ?'' என்றாள் தங்கம்மாள்.

''உறவு இல்லை; ஆனால், உறவுக்கு மேலே. பால்யம் முதல் நாங்கள் பிராண சிநேகிதாள். அவன் காரியமெல்லாம் என்னுது, என் காரியமெல்லாம் அவனுது. முந்தாநாள் ஊரிலேயிருந்து கிளம்பி வந்தபோது, ரயிலடியிலே அவனைப் பார்த்தேன். 'கல்யாணம் நிச்சயமாயிடுத்து; இப்படியே ஊருக்குத் திரும்பு. எல்லாக் காரியமும் நீதான் பார்த்துக்கணும்' என்றான். 'அப்பா! இரண்டே நாளைக்குப் பொறுத்துக்கோ! கிளம்பின காரி



யத்தை 'முடிச்சிண்டு வந்துடறேன்' என்று சமாதானம் சொல்லி விட்டு வந்தேன். 'அப்படின்னா, போறதுதான் போறயே! சம்பந்தியாத்துக்கும் போய் எட்டிப் பார்த்துட்டு வா!' என்றான். அவன் பேச்சைத் தட்டப்படாதுன்னுதான் இங்கே வந்தேன்.''

''சந்தோஷம், நல்ல வெயிலிலே வந்திருக்கீர். ரொம்பக் களைச்சுப் போயிருக்காப்பலே இருக்கே. தாகத்துக்கு ஏதாவது குளிர்ந்த...''

''அதெல்லாம் எனக்காக நீங்க ஸ்பெஷலாக் காப்பி, டீப்பின்னு ஒண்ணும் போட வேண்டாம்! தயாராயிருந்தா...''

''நன்னாருக்கு! காப்பிக்கு என்னங்கணும் குறைச்சல்? தயாராயில்லாட்டா, ஒரு நிமிஷத்திலே ஆயிடறது... அடே குப்பு சாமி! சீக்கிரம் காப்பி போட்டுக் கொண்டா!''

''அடாடா! இவ்விடத்திலே காப்பிக்கு என்ன குறைச்சல்? வேறு எதுக்குத்தான் என்ன குறைச்சல்? அதெல்லாம் சம்பு சாஸ்திரியிடம் கேட்டுண்ட்டேன். 'அடே! நீ ஜன்மாந்தரத்தலே பண்ணின புண்ணியத்தினால்தான்டா உனக்கு இப்படிப்பட்ட வரன் கிடச்சது'ன்னும் சொல்லியாச்சு. வரதட்சிணை எவ்வளவுடான்னு கேட்டேன். 'நாலாயிரம்'னான். அப்படியே அசந்து போய்ட்டேன். வெறும் வறவியெல்லாம் இந்தக் காலத்திலே ஆறாயிரம், எட்டாயிரம்னு கேக்கறான்கள். இவ்விடத்திலே ரொம்ப தாராள மனசுள்ளவாளாயிருக்கணும்னு அப்பவே தீர்மானிக்கட்டேன்!''

''ஆமாங்கணும், ஆமாம். போனாப் போறதுன்னுதான் நாலாயிரத்துக்குச் சம்மதிச்சது! ஆனால், அவ்வளவுக்கும் பின்னாலே பிராமணன் சீர் செனத்தியெல்லாம் சரியாச் செய்வார்னு நினைச்சுண்டிருக்கேன். செய்வரோல்யோங்கணும்?''

''பேஷாச் செய்வன்னா! யாருக்காகச் செய்றான்னு கேக்கறேன்! இருக்கிறது ஒரு பொண்ணு..''

''அதை உத்தேசிச்சுத்தான் நாங்களும் சம்மதிச்சது. ஏதோ குலம், கோத்ரம் நன்னாயிருக்கு. பிராமணரும் சாதுவாயிருக்கார்...''

''அதை ஏன் கேக்கறேள்? சாதுன்னா, பரம சாது! அடிச்சா அழத் தெரியாதுன்னாக்கே. குலம், கோத்திரத்துக்குத்தான் என்ன குறைச்சல்? பரம்பரையா வைதிகம். ஆனால், ஊரில் இருக்கிறவனுக அசூயை பிடிச்சவங்க. ஏதாவது அப்படி இப்படின்னு நொகக்குச் சொல்வானுக. உங்களுக்குக் கூட ஏதாவது கடுதாக, கிடுதாக வந்தாலும் வரும். அவன் தங்கைக்கு ஏதோ கெட்ட பெயர்னா, அதுக்காக இவன் என்ன பண்ணுவன்? நான்தான் கேக்கறேன்?''

தங்கம்மாள் திடுக்கிட்டவளாய், ''என்னங்கணும் பெரிய கல்லாய்த் தூக்கிப் போடறீர்? அது என்ன சமாசாரம்?'' என்று கேட்டாள்.

இத்தனை நேரமும் சம்பாஷணையில் கலந்து கொள்ளாமல் புன்னகையுடன் பிரம்பு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த ராஜா ராமய்யர், இப்பொழுது நிமிர்ந்து உட்கார்ந்து, ''ஏன், தங்கம், அவசரப்படுகிறாய்? அந்தச் சமாசாரத்தைச் சொல்வதற்காகத்தானே, தீக்ஷிதர் மூட்டை கட்டிக் கொண்டு



வந்திருக்கார்? தானே சொல்றார்!'' என்றார்.

தீக்ஷிதர் திடீரென்று தேள் கொட்டினது போல் எழுந்திருந்து, ஒரு நிமிஷம் வரையில் வாயைக் கையால் பொத்திக் கொண்டு நின்றார். பிறகு, கையை எடுத்து விட்டு, ''அடாடாடா! என்ன காரியம் பண்ணி னேன்? என் புத்தியை ஜோட்டாலே அடிக்கணும்! உங்களுக்குச் சமாசாரம் தெரிஞ்சிருக்கும்னே நினைச்சுட்டேன். இல்லாட்டா, என் வாயிலே அந்த வார்த்தை வந்திருக்குமா? ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணி வைன்னு பெரியவா சொல்லியிருக்கா. அப்படியிருக்கிற போது...'' என்றார்.

''அந்தக் கதையெல்லாம் இருக்கட்டுங்கணும். விஷயம் இன்னதென்று சொல்லும்.''

''சொல்றேன்; பேஷாய்ச் சொல்றேன்! ஒருவிதத்துக்கு உங்களுக்குத் தெரிஞ்சிருக்கிறதே நல்லது. ஆனால், அந்த அசடு இதை என்னத்துக்காக மறைச்சு வச்சான்னுதான் தெரியலை. எல்லாத்தையும் உடைச்சு முன்னாலேயே சொல்லி விடறதுதான் நல்லதே தவிர...''

''அதுதான் நல்லது; சமாசாரத்தைச் சொல்லும்!''

''பிரமாதம் ஒன்றுமில்லை. சம்பு சாஸ்திரிக்குத் தங்கை ஒருத்தி இருந்தாள். மீனாக்ஷின்னு பேரு. அவளுக்குக் கல்யாணம் ஆகி, ரொம்ப நாள் வரைக்கும் புருஷனைப் பத்தித் தகவலே கிடையாது. செத்துப் போய்ட்டான்னு சில பேர் சொன்னா; இல்லை. கிறிஸ்தவனாய்ப் போய்ட்டான்னு சில பேர் சொன்னா. ஊரிலே, இவள் இரண்டுங்கெட்டானாத் தலையிலே மயிரை வச்சுண்டு இருக்காளேன்னு புகாராயிருந்தது. இப்படியிருக்கிற போது, பாருங்கோ! மாமாங்கத்துக்குப் போறேன்னு சம்பு குடும்பத்தோட போனான் - பதினைஞ்சு வருஷத்துக் கதை நான் சொல்றது - மாமாங்கத்திலேயிருந்து திரும்பி வந்த போது, தங்கையை அழைச்சுண்டு வர்றலை. செத்துப் போய்ட்டாள்னு ஒரே அடியா அடிச்சுட்டான். ஊரிலே அதை ஒருத்தரும் நம்பலை. பல தினுசா வதந்தி. கிறிஸ்தவனாப் போன ஆம்படையானை அங்கே வரச் சொல்லி, அவனோடே கூட்டி அனுப்பிச்சுட்டான்னு சில பேர் சொன்னா. இல்லை, அவள்தான் இவன் பேச்சை மீறிப் போய்ட்டாள்னும் இரண்டொத்தர் சொன்னா. அப்புறம், இல்லையா? ஊரிலே அருயை புடிச்சவங்க இன்னும் பல தினுசாகவும் சொல்லிண்டிருந்தாளுக...''

''இதென்ன கூத்தான்னா இருக்கு? ஏன்னா, இப்படி ஒன்னு இருக்குன்னு அந்தப் பிராமணன் ஒரு வார்த்தை கூடச் சொல்லலையே!'' என்றாள் தங்கம்மாள்.

பிறகு அந்த மூன்று பேருக்குள்ளும் பின்வரும் சம்பாஷணை நடந்தது :

தீக்ஷிதர் : சொல்லலேன்னா, தப்புத்தான். இதை என்னத்துக்காகச் சொல்லாதே இருக்கணும்? இது மறைச்சு வைக்கிற காரியமா? அப்புறம் தெரியாதே போயிடுமா?

ராஜாராமய்யர் : ஆமாங்கணும், தீக்ஷிதரே! கல்யாணம் நிச்சயம் பண்றதுக்காக வந்த மனுஷ்யர், 'என் தங்கை ஓடிப் போய்ட்டாள்'னு முதலிலேயே சுக்லாம்பரதரம் குட்டிக்குவாரா?

தங்கம்மாள் : நீங்க சித்த பேசாம இருங்கோ... ஏங்கணும்! ஊரிலே இந்தப் பிராமணனை அதுக்காக ஜாதியை விட்டுத் தள்ளி கிள்ளி வச்சிருந்ததோ?

தீக்ஷிதர் : அந்த மாதிரி பேச்சு வந்தது. நான்தான் குறுக்கே நின்னு, அதெல்லாம் கூடவே கூடாதுன்னு தடுத்தேன்.

தங்க : அப்படின்னா, போனவள் இவ்விடத்துக்குப் போக்குவரத்து ஒன்னும் வச்சுக்கலையாக்கும்?

தீக்ஷிதர் : அதெல்லாம் பேசப்படாது. அப்படியிருந்தால், நானே உங்ககிட்டே 'இந்தச் சம்பந்தம் உங்களுக்கு வேண்டாம்'னு சொல்லி விட மாட்டேனா?

ராஜா : போறது, தங்கம்! இந்த மட்டும் தீக்ஷிதர் தயவு பண்ணிச் சம்மதிச்சுட்டார். ஆனா, பிள்ளையாண்டான் மக்கர் பண்றானே, அதுக்கென்ன செய்யறதுன்னுதான் தெரியலை... ஏங்கணும், பொண்ணு எப்படிங்கணும்?

தீக்ஷிதர் : பொண்ணுக்கென்ன? ஒன்னும் ஊனம் கிடையாது. ஊமை இல்லை; செவிடு இல்லை.

ராஜா : பேஷாப் போச்சு. ஊமை செவிடு இல்லையா? இவள் என்னமோ பிரமாதமா வர்ணிச்சாளே?

தங்க : ஏங்கணும், தீக்ஷிதரே? அந்தப் பொண்ணுக்கு என்னங்கணும் குறைச்சல்? பாக்கறதுக்கு, மூக்கும் முழியுமா நன்னாத் தானே இருக்கு?

தீக்ஷிதர் : சந்தேகம் என்ன? பட்டிக்காட்டிலே அதை விட என்ன பிரட்டிவிடும்னு தான் நானும் கேக்கறேன். பின்னே ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமையாயிருக்குமா?

தங்க : குடித்தனத்துப் பெண்ணுக்கு அதைவிட அழகு என்னத்துக்குங்கணும்?

தீக்ஷிதர் : அம்மா! நீங்க சொல்றது ரொம்ப சரி. அதை விடத்தான் அழகு என்னத்துக்கு? அய்யர்வாள்! நீங்களே சொல்லுங்கோ. நாமெல்லாம் கல்யாணம் பண்ணிக்கிற போது பெண் அழகைப் பார்த்தா பண்ணிண்டோம்?

ராஜா : இல்லை; நாம் பண்ணிக்கலை. அதுதான் தெரிஞ்சிருக்கே! ஆனால் அந்த மாதிரி நம்ம பிள்ளையாண்டான் பண்ணிக் குவானா?

தங்க : எல்லாம் பண்ணிக்குவன் - நீங்க கொஞ்சம் வாயை மூடிண்டு இருந்தாக்கே!

ராஜாராமய்யர், ''இதோ வாயை மூடிண்டுட்டேன்'' என்று கையினால் வாயைப் பொத்திக் கொண்டார்.

தங்க : அவர் கிடக்கார், தீக்ஷிதரே! இப் படித்தான் அவர் விளையாடுவர். நீர் சொல் லும்; சம்பந்திக்கு நிலம், நீச்சு இருக்கிற தெல்லாம் நிஜந்தானே?

தீக்ஷிதர் : ஆஹா! அதிலே ஒரு வார்த்தை பிசகில்லை. ஆறரை வேலி நன்செயும், மூணு வேலி புன்செயும் இருக்கு. பேஷான நிலம். தலை வாய்க்கால் பாய்ச்சல். இளை யாளுக்கு மட்டும் பிள்ளை கிள்ளைன்னு பிறந்து வைக்காதிருந்தால், எல்லாம் உங் களைச் சேர வேண்டியதுதான்!

தங்க : இந்தக் காலத்திலே அதை நம்பி இருக்க முடியுமாங்கணும்?

தீக்ஷிதர் : அதெப்படி இருக்க முடியும்? பின்னாலே நடக்கப் போறதை யார் கண்டா? இப்பவே முடிஞ்ச வரையிலே நம்ம குழந்தைக்கு நாம் வரப் பத்திக்க வேண்டியதுதான்; மனுஷன் என்னமோ மொத்தத்திலே நல்லவன்...

தங்க : இருந்தாலும், அவர் தங்கை சமா சாரத்தைச் சொல்லாமே மறைச்சது எனக் குப் புடிக்கவேயில்லை.

தீக்ஷிதர் : அது பிசகுதாம்மா, பிசகுதான்! ஆனால், அதுக்காகக் கல்யாணத்தை மாத் திரம் நிறுத்தி விடாதேங்கோ. என்ன அப ராதம் வேணுமோ சொல்லுங்கோ, நான் வாங்கித் தர்றேன்.

தங்க : நாங்க கல்யாணத்துக்கு வர்ற போது, நீங்கதான் எங்களையெல்லாம் கவனிச்சுக்கணும்.

தீக்ஷிதர் : நன்னாயிருக்கு; காத்திண் டிருக்கேன். என்னை உங்க மனுஷன்னு நினைச்சுக்குங்கோ. அவ்வளவுதானே! கிட்டி முட்டி விசாரிக்கப் போனால், ஏதா வது உறவு கிறவுன்னு கூட ஏற்பட்டுடும்; திருவிடை மருதூரிலே உங்க தங்கையைப் போஸ்ட் மாஸ்டர் பஞ்சாபகேசய்யருக்குக் கொடுத்திருக்கு இல்லையோ?

தங்க : ஆமாம்; அவருக்கு நீங்க சொந் தமா, என்ன?

தீக்ஷிதர் : அவருடைய தங்கை மாப்பிள் ளைக்கு நான் சாக்ஷாத் சித்தப்பா! கிட்ட வந் தாச்சு, பாத்தயளோல்லியோ?

இந்தச் சந்தர்ப்பத்தில் குப்புசாமி காப்பி கொண்டு வந்துவிட்டபடியாலும், தங்கம் மாளும் ராஜாராமய்யரும் பட்டணம் போகக் கிளம்ப வேண்டியிருந்தபடியா



''ஏன் சார்... உங்க கதையோட ஸ்கேலையும் கொடுத்திருக்கீங்க...?''

''என் கதையோட ஆழத்தைப் பார்க் கணும்னு சொன்னீங்களே!''

– கா.ரா. குமார்.

லும், சம்பாஷணை இத்துடன் முடிந்தது. தீக்ஷிதர் சூடான காப்பியைச் சாப்பிட்டு விட்டு, குளிர்ந்த மனத்துடன் கிளம்பிச் சென்றார்.

## 10. எடு அபராதம்!

சம்பு சாஸ்திரி வீட்டு வாசலில் பந்தக் கால் முகூர்த்தம் ஆனதிலிருந்து ஊரில் கல்யாணக் களை ஏற்பட்டு விட்டது. அக்கிர காரத்தில் சரி பாதியை அடைத்துப் பந்தல் போட்டார்கள். வாழை மரங்களும், திரைச் சீலைகளும் கொண்டு வந்து கட்டினார்கள்.

ஊரில் உள்ள பசங்களுக்கெல்லாம் கல் யாணப் பந்தல்தான் நிரந்தர வாசஸ்தல மாயிற்று. அவர்கள் சதா பந்தல் கால்களைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டும், குதித்துக் கொண்டும், கொம்மாளம் போட்டுக் கொண்டும் இருந்தார்கள். அந்தக் கடுங் கோடையில், அவர்கள் விளையாடுவதற்கு இவ்வளவு குளிர்ந்த இடம் வேறு எங்கே கிடைக்கும்?

சம்பு சாஸ்திரி எதிர்பார்த்தபடியே, ஊரிலுள்ளவர்கள் அந்தச் சமயத்தில் விட்டுக் கொடுக்காமல் அவருக்கு ஒத்தாசை செய்ய முன்வந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரியத்தை ஏற்றுக் கொண்டு செய்தார்கள். அவரவரும் தங்கள் சொந்தக் காரியத்தையும் கொஞ்சம் சேர்த்துப் பார்த்துக் கொண்டார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை. கல்யாணச் சாமான் ஜாப்தா போடும் போது சாமாவய்யர் பன்னி ரண்டு சீட்டுக் கட்டுப் போட வேண்டு மென்று வற்புறுத்தி அப்படியே வரவழைத் துக் கொண்டார். சீனிவாசய்யர் ஒன்பது கட்டுச் சிவபுரி புகையிலை கட்டாயம் வேண்டும் என்று சொன்னார். ஷோக் சுந்தர மய்யர், சந்தனம், ஸெண்டு, ஊதுவத்தி வகையறா மட்டும் ஐம்பது ரூபாய்க்குத் திட்டம் போட்டார். இந்த மாதிரியே கல் யாணம் சிறப்பாக நடக்க வேண்டியதற்கு

யோசனைகளை ஒவ்வொருவரும் சொன்னார்கள். உக்கிராணச் சாமான்கள் வாங்கிக் கொண்டு வரப்போன பஞ்சாபகேசய்யர், தம் வீட்டுக்கு ஒரு வருஷத்துக்கு வேண்டிய மளிகைச் சாமான்களையும் சேர்த்து வாங்கிக் கொண்டு வந்து விட்டார் என்று ராமய்யா வாத்தியார் சத்தியம் பண்ணத் தயாராயிருந்தார்.

சமையலுக்குக் குண்டுக் கிருஷ்ணனை அமர்த்தி, அவன் ஒன்பது ஆட்களுடன் வருவதற்கு ஏற்பாடு செய்தார்கள். உள்ளூர்க் கோவில் மேளக்காரனுடன், திருநாகேசுரம் தங்க நாயனத்துக்கும் அச்சாரம் கொடுக்கப் பட்டது. இரண்டு நாள் கதாகாலட்சேபத்துக்குச் சம்பு சாஸ்திரியே ஏற்பாடு செய்து விட்டார்.

கல்யாணத்துக்கு இரண்டு நாளைக்கு முன்பிருந்தே சமையற்காரர்கள் வந்து சமையல் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அப்புறம் அக்கிரகாரத்தில் பாட்டியம்மாள்களையும் வியாதிக்காரர்களையும் தவிர, பாக்கி எல்லாருக்கும் கல்யாண வீட்டில் தான் சாப்பாடு.

பஜனை சம்பு சாஸ்திரி என்றால் சுற்று வட்டாரத்தில் வெகு தூரத்துக்குத் தெரிந்திருந்தது. அவருக்கு ஒரே பெண்; அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் என்றதும், வைதிகர்கள் வந்து குவிய ஆரம்பித்து விட்டார்கள். எனவே, கல்யாணத்துக்கு முதல் நாள், பந்துக்களும், சிநேகிதர்களும், வைதிகர்களும், கதை கச்சேரி கேட்கலாமென்று வந்தவர்களும், கல்யாணச் சாப்பாட்டை உத்தேசித்தே வந்தவர்களுமாக, ஊர் ஜே ஜே என்று ஆகி விட்டது.

கடைசியாக, சம்பந்திகளும் வந்து சேர்ந்தார்கள். ஆனால் எதிர்பார்த்தது போல் அவர்கள் அவ்வளவு பேர் இல்லை. ரயிலடிக்குப் பத்து வண்டிகள் அனுப்பியிருந்தும், ஆறு வண்டிக்குத்தான் ஜனங்கள் வந்தார்கள். மாப்பிள்ளையை அழைப்பதற்கு முன், ஊரின் கீழ்க் கோடியிலிருந்த சிவன் கோவிலில் அவர்கள் சற்று நேரம் தங்க ஏற்பாடாகியிருந்தது. அங்கே ஊராரும் வரவழைக்கப்பட்டனர். சம்பந்திகளுக்கும் ஊராருக்கும் அங்கே பரிச்சயம் ஏற்பட்டது. பிறகு, 'ஜான்வாஸ' ஊர்வலம் ஆரம்பமாயிற்று. அதற்காக வந்திருந்த கோச் வண்டியில், மாப்பிள்ளை ஸ்ரீதரன் ஜம்மென்று உட்கார்ந்திருந்தான். விலையுயர்ந்த ட்வீட் துணியில் தைத்த கால்சட்டையும் மேல்சட்டையும், காலரும் நெக்டையும் தரித்து, கிராப் செய்த தலையை அழகாக வாரி விட்டுக் கொண்டு, நெற்றியில் சின்னஞ்சிறு சாந்துப் பொட்டுடன் அவன் அலட்சியமாகக் கோச் வண்டியில் உட்கார்ந்திருந்ததைப் பார்த்த நெடுங்கரை





வாசிகள், 'இந்தச் சம்பு சாஸ்திரி பெண்ணுக்கு இப்படிப்பட்ட மாப்பிள்ளையா!' என்று மனத்திற்குள் அருவருப்பட்டார்கள். ஆனால் வெளியில், ''மாப்பிள்ளை அவ்வளவு ஆசாரமாயிருக்க மாட்டான் போலே இருக்கு. போகப் போகத் தெரியணும்?'' என்றும், ''தலையை ஏன் இப்படி விகாரம் பண்ணிண்டிருக்கான்? அழகாகக் கட்டுக் குடுமி வச்சிண்டிருக்கப்படாதோ?'' என்றும், ''சம்பு சாஸ்திரியின் கர்நாடகத்துக்கும் இந்தப் பிள்ளையின் டவுன் நாகரிகத்துக்கும் எங்கே சரிப்பட்டு வரப் போகிறது?'' என்றும் பலவாறு பேசிக் கொண்டார்கள்.

ஊர்வலம் முடிந்ததும் சாப்பிடக் கூப்பிடுவதை எதிர்பார்த்து எல்லாரும் திண்ணையிலும் பந்தலிலுமாக உட்கார்ந்திருந்தார்கள். ''இலை அப்போதே போட்டாச்சே! ஏன் தாமசம்?'' என்று ஒரு கேள்வி எழுந்தது. ''சம்பந்திகளைக் கூப்பிடப் போயிருக்கிறார்கள். அவர்கள் இன்னும் வரவில்லை'' என்று ஒருவர் சொன்னார். அப்புறம் கொஞ்ச நேரம் 'கசமுச' 'கசமுச' என்று காதோடு காதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். ''மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானுக்குப் பெண் பிடிக்கவில்லையாம். கல்யாணம் வேண்டாம், ஊருக்குப் போகணும்கிறானாம்'' என்று ஒரு வதந்தி பரவிற்று. ''அவன் இன்னும் பெண்ணையே பார்க்கவில்லையே?'' என்று சிலர் கேட்டார்கள். ''பெண்ணின் அப்பாவைப் பார்த்ததுமே பையனுக்குப் போரும்னு ஆயிட்டதாம்!'' என்று ஒரு ஹாஸ்யப் பிரியர் சொன்னார். ''சீச்சீ! அதெல்லாம் இல்லேடா! ஊர்கோலத்துக்கு மோட்டார் வைக்கலேன்னுதான் பையனுக்குக் கோபமாம். சுத்த கர்நாடகமா, கோச் வண்டியில் உட்கார்ந்து ஊர்கோலம் வந்தது அவனுக்குப் பிடிக்கலையாம்!'' என்றார் இன்னொருவர்.

இப்படி எல்லாரும் தலைக்கு ஒரு விதமாகப் பேசிக் கொண்டிருக்கையில் தீக்ஷிதர் அவசர அவசரமாகச் சம்பு சாஸ்திரி வீட்டுக்கு வந்து, அவரைச் சம்பந்திகளின் ஜாகைக்கு அழைத்துக் கொண்டு போனார்.

சம்பந்தி - ஜாகையில் கூடத்திலே ராஜாராமய்யர் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். தங்கம்மாள் பக்கத்தில் நின்றாள். சாஸ்திரியைக் கண்டதும், தங்கம்மாள் பக்கத்தில் நின்றவர்களை, ''நீங்கள்ளாம் போங்கோ!'' என்று அதட்டவே, எல்லாரும் விலகிப் போனார்கள்.

''என்னங்காணும், இப்படிப் பெரிய கல்லாத் தூக்கிப் போட்டுட்டீரே!'' என்றாள் தங்கம்மாள்.

இந்தப் பேச்சு, சாஸ்திரியின் தலையில்

பெரிய கல்லைப் போலவே விழுந்தது. அவர் பிரமித்துப் போய், ''என்ன? என்ன?'' என்று கேட்டார்.

''என்னவா? உம்ம தங்கை சமாசாரத்தை எங்ககிட்டச் சொல்லாமயே இருந்துட்டீரே? இவாளுக்கு எங்கேடா தெரியப் போறது, ஏமாத்தி விடலாம்னுதானே இருந்தேள்?'' என்றாள்.

சாஸ்திரிக்கு ஒருவாறு இது ஆறுதல் அளித்தது. அதே சமயத்தில் துயரமும் பொங்கிக் கொண்டு வந்தது.

''அம்மா! இந்தக் கல்யாண சமயத்திலே அவள் பேச்சை ஏன் எடுக்கறயள்! அவளுக்கு நான் ஸ்நானம் பண்ணி எத்தனையோ வருஷம் ஆச்சே! அவளுக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையே!'' என்றார். அவருடைய கண்களிலிருந்து அப்போது கண்ணீர் பெருகி வழிந்தது.

''இருந்தாலும், இப்படிக் குடும்பத்திலே ஒரு குத்தம் இருக்குன்னு எங்களுக்குச் சொல்லியிருக்க வேண்டாமோ? இப்படிப்பட்ட இடத்திலே வந்து சம்பந்தம் பண்ணிக்கணும்னு எங்களுக்கு என்னங்கணும் வந்திருக்கு?.... ஏன்னா நீங்க பாட்டுக்குப் பேசாமலிருக்கயளே?'' என்று தங்கம்மாள் ராஜாராமய்யரைப் பார்த்துக் கேட்டாள்.

''என்னை என்னத்தைச் சொல்லச் சொல்றே? விஷயந்தான் தெரிஞ்சிருக்கே. உனக்கு ஒரு காரணத்தினாலே பிடிக்கலை. பையனுக்கு இன்னொரு காரணத்தினாலே பிடிக்கலை. அப்புறம் என்ன கல்யாணம் வேண்டியிருக்கு? அவர் கிட்டச் சொல்லிட்டு, பேசாமே கிளம்பிப் போக வேண்டியதுதான்'' என்றார் ராஜாராமய்யர்.

சம்பு சாஸ்திரிக்கு இடி விழுந்தது போல் இருந்தது. ''ஐயர்வாள்! என்ன இப்படிச் சொல்றயளே! எனக்கு ஒன்னும் புரியலையே?'' என்றார்.

இப்போது தீக்ஷிதர் குறுக்கிட்டு, ''ஆமாங்கணும்; உமக்கு ஒன்னும் புரியாது. அப்பவே, நான் ஊர்கோலத்துக்கு மோட்டார் கார் வரவழையும்னு சொன்னேனோ, இல்லையோ? மாப்பிள்ளைப் பையனுக்கு அதுதான் கோபமாம்!'' என்றார்.

''அவன் ஏற்கெனவே பட்டிக்காட்டுப் பெண் வேண்டாம்னு சொல்லிண்டிருந்தான். அதுக்குத் தகுந்தாப்பலே, இந்த ஊரானா, மகா பட்டிக்காடாக இருக்கு. நீரானா, ஓர் ஓட்டைக் கோச் வண்டியைக் கொண்டு வந்து ஊர்கோலத்துக்கு நிறுத்தியிருக்கீர்'' என்றாள் தங்கம்மாள்.

''இந்தச் சின்ன காரியத்துக்காகக் கோவிச்சுக்கலாமா? மோட்டார் காருக்குத் தான் சொல்லியனுப்பிச்சேன்; சமயத்திலே கிடைக்கலை; நாலாம் நாள் ஊர்கோலத்துக்கு எப்படியாவது மோட்டார் வண்டி கொண்டு வந்துடறேன்...''

''நாலாம் நாள் ஊர்கோலத்துக்கு நீர் என்னங்கணும் ஏற்பாடு செய்யறது? அது அவாளைச் சேர்ந்ததுன்னா?'' என்றார் தீக்ஷிதர்.

''இனிமேல் எல்லாம் அவாளைச் சேர்ந்ததுதான். எனக்கு மனுஷ்யாள் கிடையாது. அவாள்தான் எல்லாத்தையும் எடுத்துப் போட்டுண்டு செய்யணும்.''

''அதுக்கென்ன, பேஷாய்ச் செய்யறேன். நாளைக்குத் தாலி கழுத்திலே ஏறிடுத்துன்னா, அப்புறம் நீங்க வேறே, நாங்க வேறேயில்லை. அதுவரையிலே தனித் தனி தானே? என்ன இருந்தாலும், நீர் உம்ம தங்கை சமாசாரத்தை மறைச்சு வச்சதுக்கு இப்ப ஒரு வழி பண்ணித்தான் ஆகணும்'' என்றாள் தங்கம்மாள்.

''அப்படி ஒன்னும் நான் வேணும்னு மறைக்க வைக்கல்லே, அம்மா! சந்தர்ப்பம் ஏற்படலை, சொல்லலை; அவ்வளவுதான். இப்ப நீங்க என்ன சொல்றயளோ, அந்தப்படி கேக்கறேன்'' என்றார் சாஸ்திரி.

''அப்படின்னா, நான் முதல்லே கேட்டபடி ரூபாயைக் கொடுத்துடும். முழுசா, ஐயாயிரம் ரூபாயாயிருக்கட்டும். பாக்கி ஆயிரம் ரூபாயையும் இப்பவே அனுப்பிச்சுடும். நான் போய், பிள்ளையாண்டானை அப்பா ஐயான்னு கெஞ்சி, தாவாக் கட்டையைப் பிடிச்சுச் சமாதானம் பண்ணியாகணும்'' என்றாள் தங்கம்மாள்.

சாஸ்திரி மனத்துக்குள், 'அடாடா! இது என்ன பணத்தாசை! அதுவும் இந்த மாதிரி சந்தர்ப்பத்திலா?' என்று எண்ணிக் கொண்டார். ஆனால், வெளிப்படையாக, ''அதற்கு என்ன, அம்மா! அப்படியே செய்து விட்டால் போகிறது! இதோ ஆயிரம் ரூபாயும் அனுப்பி விடுகிறேன். அதற்காகக் காரியம் தவக்கமாக வேண்டாம். ஊரார் எல்லாரும் சாப்பிடக் காத்துண்டிருக்கா. உங்க மனுஷ்யாளையும் உடனே வரச் சொல்லுங்கோ!'' என்று சொல்லி விட்டுப் போனார்.

(தொடரும்)



''இண்டர்வியூவில் ஒரு கேள்வி கேட்டவரை இரண்டு கேள்விகள் கேட்டு மடக்கிட்டேன்!''

''எப்படி?''

''பத்தாயிரம் ரூபாள் தர முடியுமான்னாரு!! 'கேஷா, செக்கா'ன்னு கேட்டு அசத்திட்டேன்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்.

# புதுமைத் திட்டம் No. 3
# "லில்லி" உள்பாவாடைகள்

## திட்டத்தின் விபரம் :

1. ரூ. 300/-ஐ D.D. அல்லது M.O. மூலம் P.R.C. கார்மெண்ட்ஸ் என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள். இத் திட்டத்தில் முதலில் வரும் 5000 உறுப்பினர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

2. பணம் கிடைக்கப் பெற்றவுடன் உடனடியாக ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) உங்களுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

3. நீங்கள் பணம் செலுத்தியதிலிருந்து ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) ஆண்டுக்கு ஒருமுறை வீதம் தொடர்ந்து ஆறு ஆண்டுகளுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

4. பணம் கிடைக்கப் பெற்ற தேதியிலிருந்து 84 மாதங்கள் (7 ஆண்டுகள்) நிறைவு பெற்றவுடன் ரூ. 600/- ஆக உங்களுக்கு வழங்கப்படும்.

5. நீங்கள் பணம் செலுத்தியவுடன் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகளுடன் (Normal Size) 7 ஆண்டுகள் கழித்து ரூ. 600/- திரும்பப் பெறுவதற்கான Repayment Gaurantee Card உடனடியாக வழங்கப்படும்.

| | நீங்கள் செலுத்தும் தொகை | பணம் செலுத்தியவுடன் | முதலாம் ஆண்டு இறுதியில் | இரண்டாம் ஆண்டு இறுதியில் | மூன்றாம் ஆண்டு இறுதியில் | நான்காம் ஆண்டு இறுதியில் | ஐந்தாம் ஆண்டு இறுதியில் | ஆறாம் ஆண்டு இறுதியில் | 7 ஆண்டு முடிந்தவுடன் திரும்ப பெறும் தொகை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வயதுக்கேற்ற அதிகபட்ச இடுப்பு சுற்றளவு 35"/88செமீ | ரூ 300/- | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ.84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 600/- | ரூ 1188/- |
| Spl Size [illegible] 40"/102 Cms. | ரூ 350/- | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 700/- | ரூ 1400/- |

Normal Size, மற்றும் Spl. size-ல் கிடைக்கும் உயரங்கள் : 90, 95, 100 & 105 செ.மீ.

*பங்கு கொள்வீர்!* *பயன் பெறுவீர்!!*

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**P.R.C. கார்மெண்ட்ஸ்**

*26, பிரதட்சணம் ரோடு, 'ஏ' பிளாட்,*

*கரூர் - 639 002.* *போன் : 21946*

எங்கள் நிறுவனம் 1984-ல் பாரத பிரதமரின் படித்த இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் கரூர் கனரா வங்கியின் பொருளாதார உதவியுடன் துவக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

குறிப்பு :
- ★ நீங்கள் செலுத்தும் தொகை முழுமையாக, 65 ஆண்டுகளாக மக்கள் சேவையில் ஈடுபட்டிருக்கும் கரூர் 'தி லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிட்'-ல் டெபாசிட் செய்யப்படும்.
- ★ மேற்படி டெபாசிட் தொகையிலிருந்து எங்கள் நிறுவனத்தின் நடைமுறை மூலதனத்திற்காக (Working Capital) வங்கியிலிருந்து கடன் வசதி பெற்றுக் கொள்ளப்படும்.
- ★ Spl. Size (ஸ்பெஷல் சைஸ்) வேண்டுவோர் ரூ. 350/- செலுத்தவும்.
- ★ உங்களுக்கு தேவையான கலர் மற்றும் அளவுகளை குறிப்பிட்டு எழுதினால் அதன்படி அனுப்பி வைக்கப்படும்.
- ★ வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் இத் திட்டத்தில் பங்கு பெறலாம். 'லில்லி' உள்பாவாடைகள் மற்றும் இதர கடிதத் தொடர்புகள் அவர்களுடைய இந்தியாவில் உள்ள விலாசத்திற்கு மட்டுமே அனுப்பி வைக்கப்படும்.



காவிரியில் தண்ணீர் விடவில்லை என்ப
கோபிக்கிறோம். 'கிருஷ்ணா நதி நீர்த் தி
னையைக் கூட அரசு சரியாகக் கவனிக்
தவறில்லைதான். ஆனால் நம்மை விட
மையில் உள்ள இஸ்ரேல் எப்படி சமாளி
லாமே?

# கடல் நீர் இருக்கக் கவலை எதற்கு?

இஸ்ரேல் நாட்டில் விவசாயத்துக்
தண்ணீர்த்தட்டுப்பாடு பற்றிக் கேட்கவே
பூர்த்தி செய்து கொண்டு, ஆண்டுதோறும்
பலவித விவசாயப் பொருட்களை அந் நாடு
மாயிற்று? விவசாயிகளின் உறுதியும் வி
செயல்பட்டதால்தான்!

நாட்டின் சரிபாதி நிலம் கிட்டத்தட்ட
அளவில் வரண்டு போகக் காரணம், பல்



நில அரிப்பும்தாம். இவற்றைக் கவனிப்பாரில்லை. 19-ம் நூற்றாண்டின் இறுதியில் யூதர்கள் இப் பகுதியில் குடிபுகத் தொடங்கினர். உணவு உற்பத்திதான் முதல் கவனம் பெற்றது. சிறிதும் பெரிதுமான பாறைகள் அகற்றப்பட்டு வயல்கள் செப்பனிடப்பட்டன. சதுப்பு நிலப் பகுதிகள் மீட்கப்பட்டன. திட்டமிட்ட வகையில் காடுகள் வளர்க்கப்பட்டன. நில அரிப்பு தடுக்கப்பட்டது. உவர் நிலத்தைக் கழுவிக் கழுவி உப்புத் தன்மையைக் குறைத்தனர். இப்படியெல்லாம் பாடுபட்டுத்தான் விவசாய நிலங்களை உருவாக்கினர்.

1948-ல் இஸ்ரேல் சுதந்திரம் பெற்றது. அன்று 408,000 ஏக்கர் நிலப்பரப்பில் விவசாயம் நடந்தது. இன்று ஒரு மிலியன் ஏக்கருக்கும் அதிகமாக விவசாயம் நடைபெறுகிறது. இந்தக் காலகட்டத்தில் ஜனத் தொகை மூன்று மடங்கு பெருகியது. விவசாயப் பொருள்களின் உற்பத்தியோ 16 மடங்கு அதிகரித்தது!

தண்ணீர்த் தட்டுப்பாடு இன்றைக்கும் உண்டு. மழையை நம்ப முடியாது. வடக்கே ஆண்டொன்றுக்கு 28 அங்குலம் பெய்தால் தெற்கே இரண்டு அங்குல மழைதான். பெய்கிற மழையை வீணாக்காமல் சேமிக்க விஞ்ஞான முறைப்படி திட்டமிட்டுச் செயல்படுகிறார்கள். ஆனாலும் கூட வடக்கே கிடைக்கும் தண்ணீரின் அளவு தெற்கே இல்லை. எனவே தேசிய தண்ணீர் விநியோகத் திட்டம் என்பதாக வகுத்து அமுல்படுத்தியுள்ளனர். இதில் தண்ணீர் பம்பிங் ஸ்டேஷன்கள், நீர்த் தேக்கங்கள், கால்வாய்கள், 'பைப்-லைன்' குழாய்கள் என்று பலவும் உண்டு. இதன் மூலம் தெற்கே உள்ள விவசாய நிலங்களுக்கு வடக்கேயிருந்து தண்ணீர் கொண்டு வருகிறார்கள்!

இவ்வாறு கொண்டு வரப்படும் நீரைப் படுசிக்கனமாகச் செலவழிக்கிறார்கள். பயிர்களுக்கு நீரை வீணாக்காமல் குறைந்தபட்சமாக அளிக்கிறார்கள். நீர் நேரடியாக வேரில் மட்டுமே பாய வழி வகுக்கிறார்கள். இதற்கெல்லாம் கம்ப்யூட்டர்களும் உதவுகின்றன.

தண்ணீர் பெறும் அளவை அதிகரிக்கவும் விஞ்ஞானிகள் திட்டமிடுகிறார்கள். செயற்கை மழை பொழியச் செய்வது, உப்பு நீரிலிருந்து உப்பை நீக்குவது, சாக்கடை நீரைச் சுத்திகரித்து உபயோகிப்பது முதலியன இத் திட்டத்தினுள் அடங்கும்.

'தண்ணீர் கிடைக்குமா? கிடைக்குமா' என்று தேடப் போய், நிகேவ் பாலைவனத்துக்குக் கீழே பூமி மட்டத்துக்கு அடியில் மிகப் பெரிய ஏரி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் முற்றிலும் உப்பு நீர்! உப்பு நீரைக் கொண்டு என்னென்ன பயிர்களை வளர்க்க முடியும் என்று விஞ்ஞானிகள் ஆராய்ந்து, அந்தகைய பயிர்களை வளர்க்க விவசாயிகளுக்கு ஊக்கமளித்தார்கள்.

அரசு - விஞ்ஞானிகள் - விவசாயிகள் ஒத்துழைப்பு காரணமாக ஒவ்வொரு விவசாயிக்கும் இவ்வளவுதான் தண்ணீர் என்று 'கோட்டா' நிர்ணயிக்கப்படுகிறது. அதற்கு விலையும் உண்டு. அரசே விலை நிர்ணயிக்கிறது.

சமீபத்தில் அமுலாகியுள்ள பத்தாண்டுத் திட்டம் விவசாயிகள் - விஞ்ஞானிகளுக்குப் பெரும் சவாலாக அமைந்துள்ளது. விவசாயிகளுக்கு சுத்திகரிக்கப்பட்ட நீர் கொடுப்பதை மட்டுப்படுத்துதல், மேம்படுத்தப்பட்ட உப்பு நீரை விவசாயத்துக்கு அதிகமாகப் பயன்படுத்துதல், தண்ணீரை அதிகமாகக் குடித்தும் போதிய அளவு மகசூல் தராத இனங்களில் விவசாய உற்பத்தியைக் குறைத்தல்; மழைக் கால வெள்ள நீரைச் சேமித்தல், கடல் நீரைச் சுத்திகரித்தல் என்று பல அம்சங்களை உள்ளடக்கிய இந்தத் திட்டம் ஏற்கெனவே சோலைவனமாகியுள்ள பாலைவனத்தை சொர்க்கபுரியாகவே மாற்றி விட்டாலும் வியப்பதற்கில்லை!

– ஜெயந்தி

வண்ணப்படம் : கோபிநாத்

ற்காகக் கர்நாடகத்தைக்
டம் என்னாச்சு? குடிநீர் பிரச்
ல்லையே' என்று சாடுகிறோம்.
படுமோசமான வறட்சி நிலை
கிறது என்பதையும் பார்க்க

ஏற்ற நிலமே மிகக் குறைவு.
ண்டாம். ஆனாலும் சுயதேவையைப்
6 மிலியன் டாலர் பெருமானமுள்ள
றுமதி செய்கிறது. இது எப்படி சாத்திய
ஞானிகளின் ஆற்றலும் கைகோத்துச்

ாலைவனம் போன்றது. உழ முடியாத
ண்டுகளாகக் காடுகள் அழிக்கப்பட்டதும்



# ராஜதுரை

கிராமத்து ரவுடி ஆனந்தராஜின் அட்டகாசங்களைச் சமாளிக்க முடியாமல் போலீஸ் இலாகாவே திணறும் போது, அவரைக் கைது செய்து சிறைக்கனுப்புவதாக இன்ஸ்பெக்டர் விஜய்காந்த்தின் சவால் (1). அவர் அவ்வாறே செய்து விட -

தொடங்கிய அரைமணியில் கதை முடிந்து விட்டதேயென எழுந்திருக்க யத்தனித்தால்...

இப்போது ஆனந்தராஜின் சவால் (2), கத்தியின்றி - துப்பாக்கியின்றி விஜய்காந்த்தைத் துடிதுடிக்கச் செய்வதாக. அந்தச் சவால் நிறைவேற வேண்டாமா? ஆகவே, போதிய சாட்சியங்கள் இல்லை எனக் கூறி நீதிபதி அவரை விடுதலை செய்து விட -

அவர் விஜய்காந்த்தின் மகனைக் கடத்திப் போய் தம்முடைய பிரதிபலிப்பாக வளர்த்து விஜய்காந்த்துடன் மோத விட்டு, அவர் துடிதுடிக்க -

சவால் நிறைவேறி விட்டது, கதை முடிந்து விட்டது எனக் கருதி மீண்டும் எழுந்திருக்கும் போது, விஜய்காந்த்தின் சவால் (3)...

("யோவ்! விஷயத்துக்கு வாய்யா! சும்மா சவாலையே சொல்லிக்கிட்டு...")

இரட்டை வேடங்களில் விஜய்காந்த். மகன் - பலமுறை பார்த்துப் பழகிப் போன அதே விஜய்காந்த். தந்தை - கனமான பாத்திரம். நடிப்பில் புதிய பரிமாணங்கள்.

'மீண்டும் வில்லனாக' ஆனந்தராஜ். கதாநாயகச் சிற்றுலா அவருடைய வில்லத்தனத்தின் மெருகைச் சற்றும் குறைக்கவில்லை. சொல்லப் போனால், கூடுதல் நயம்.

சிவரஞ்சனியா அது? அடேயப்பா! ஆனந்தராஜின் தூண்டுதலின் காரணமாக, மகன் விஜய்காந்தைத் தன்பால் மோகம் கொள்ளச் செய்ய அவர் மீது என்னமாய் மோதுகிறார்! அதுவும் அந்தப் பாடல் காட்சியில்... 'லிபரேட்டட்' நடிப்பு.

குற்றவாளியாக மகன் - நடவடிக்கை எடுப்பவராகத் தந்தை - இடையில் பாசத்தால் தவிக்கும் தாய்... உணர்ச்சிகளின் மோதல் உச்சத்தை எட்டும் வேளையில், 'தாலிக் கொடியா? தொப்புள் கொடியா?' என்கிற டீ.வி. பட்டிமன்றத் தலைப்புப் பாணி வசனம் செயற்கையாகத் தெரிவது மட்டுமல்ல, இதே போன்ற சூழ்நிலையில் 'தங்கப் பதக்கம்' படத்தில் காணப்பட்ட நயத்தையும் நினைவுக்குக் கொண்டு வருகிறது.

விசாரணைக் கமிஷன் போட்டு விட்டால் அதன்பின் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை என்பது அரசியல் சம்பிரதாயம் என்றால் பயங்கரமான குற்றங்களுக்காகக் கைது செய்யப்படுபவரை ஜாமீனில் எடுத்து விட்டால், அதன் பின் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை என்பது சினிமா சம்பிரதாயம் போலும்!

விறுவிறுப்பான சவால் தொகுப்பு.

– சி.ஆர்.கே.

# அறிவிக்கிறோம்!




இனி மங்களம் பொங்கட்டும் உங்கள் வாழ்வில்! நன்கு சிந்தித்து உருவாக்கிய அருமையான எட்டு திட்டங்களை, உபாஸனா உங்களுக்கு அறிவிக்கிறது! எல்லா தேவைகளுக்கும், அவரவர் நிதிநிலைமைக்கும் உகந்த திட்டங்கள்.

உபாஸனா! அதிக பலன் தரும் திட்டங்களோடு இணைந்த அபாயங்களை இங்கு சந்திக்க வாய்ப்பில்லை!

கடந்த எட்டு வருடங்களாக, தவணைகொள்முதல், லீஸிங் மற்றும் வைப்புத் தொகை முதலான நிதித்திட்டங்களை கையாண்டுவரும் நிறுவனம் உபாஸனா ஃபைனான்ஸ். 'டிவிஎஸ்' நிறுவனங்கள் தொடர்ந்து பராமரிக்கும் மதிப்புகளை பிரதிபலிக்கும் நிறுவனம்!

உபாஸனாவின் தலைவர் திரு. சுரேஷ் கிருஷ்ணா, சுந்தரம் பாஸ்னர்ஸ் நிறுவனத்தின் தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர். மற்றும் பல 'டிவிஎஸ்' நிறுவனங்களின் இயக்குநர் குழுவில் அங்கத்தினர்.

மங்களகரமாக தொடங்குங்கள். நேரிலோ, தொலைபேசி மூலமோ எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்! உங்களுக்கு எல்லாவகையிலும் உகந்த, ஆக்கபூர்வமான முதலீட்டு வழிகளைப் பற்றி சரியான ஆலோசனைகள் மற்றும் தேவையான விவரங்களைக் கூற காத்திருக்கிறோம்.




ஓய்வுக்கு பின்னும் வாழ்க்கையை உற்சாகமாய் நடத்த உதவும் திட்டம் இத்திட்டத்தில் 35 வயதில் நீங்கள் பங்கு கொள்ளுங்கள் (மற்ற வயதினர் சேர்வதில் தடையேதுமில்லை) மாதந்திரு 500 ரூபாய் சேமியுங்கள் இத்திட்டத்தில். இருபது வருடங்களில் உங்கள் கணக்கிலோ ரூபாய் 6,58,175/- தொகை மொத்தமும் பெறலாம். அல்லது மாதம் ரூ. 7,676/- வீதம் நிரந்தரமாகப் பெறலாம்! ஆம்! உங்கள் சந்ததியினருக்கும் இந்த பயன் தொடரும்.




உங்கள் வாழ்வு வளமுடையதாக திகழட்டும். இந்த திட்டத்தில் நீங்கள் 'டெபாசிட்' செய்வது ரூ. 1,00,000/- 20 வருடங்கள் கழிந்து உங்களுக்கு கிடைப்பதோ 16,12,000/-. மொத்த பணமாய் பெறலாம் அல்லது மாதம் ரூ. 18,806/- அல்லது வருடம் ரூ. 2,41,155/- என்று நீங்களும் வாழ்நாள் முழுவதும் பெறலாம். உங்களை தொடர்ந்து உங்கள் சந்ததிக்கும் உண்டு இந்த பலன்.




ஒரு குழந்தையை பெற்று வளர்க்கும் வாழ்க்கையின் அரிய பொறுப்பை சுகமானதாக்கும் தனித்தன்மை வாய்ந்த திட்டம். உங்கள் திருமண நாளன்றே தொடங்கலாம் மாதம் 1000/- ரூபாய் டெபாசிட் செய்வதன் மூலம் இத்திட்டத்தில் நீங்கள் பங்கேற்கலாம்.

ஐந்து வருடங்கள் கழிந்து உங்கள் முதலீடு உற்சாகமாக வளர்ந்து 87,200/- ரூபாய்களாக உங்களுக்கு கிடைக்கும். மாதம் ரூபாய் 1015/- வீதம், அல்லது வருடம் ரூபாய் 13,015/- வீதம்.

வாழ்நாளெல்லாம் பெறுங்கள் உங்கள் வாழ்நாளில் மட்டுமல்ல ! உங்கள் சந்ததியினரும் தொடர்ந்து பெறலாம். மொத்தமாக ரூ. 87,200/- பெறுவதிலும் தடையில்லை.




உங்கள் மகன் அல்லது மகளின் திருமணத்தை நடத்த திட்டமிடுவது வட்டமடைய வைக்கும் செயலல்ல இனிமேல். வரலட்சுமியும், உபாஸனாவும் வாழ்த்துக்களோடு வழங்கும் திட்டம் இதோ ! உங்கள் குழந்தை பிறந்தவுடன் வருடத்திற்கு ரூபாய் 5000/- என்ற கணக்கில் இத்திட்டத்தில் சேமியுங்கள். இருபது வருடங்களில் ரூபாய் 5,84,140/- உங்கள் கணக்கில். முன்னெச்சரிக்கையுடன் திட்டமிட்டது நீங்கள் ! இனி திருமணத்தை ' ஜாம் ஜாம் ' என்று நடத்த என்ன தயக்கம் ? உங்கள் குழந்தை வளர்ந்து 25 வயதில் திருமணம் செய்து கொண்டால் உங்களுக்கு கிடைப்பது ரூ. 11,71,500/-.

## நம்பிக்கை ! மதிப்பு ! சேவை !



**உபாஸனா**
ஃபைனான்ஸ் லிமிடெட்

**தொடரும் நம்பிக்கையென்னும் 'டிவிஎஸ்' பாரம்பரியம்!**

பொன்னியின் செல்வனைப் படித்தவர்களுக்கு அருள்மொழிவர்மனாம் இராஜராஜன், பேரரசனும் மாவீரனும் மட்டு மல்ல, ஆழ்ந்த பக்திமான் என்பது தெரியும். அவன், கையில் வாளேந்தாது அடக்கத்துடனும் அருளுடனும் ஓலைச் சுவடிகள் ஏந்தி நிற்கும் அழகிய படிமத்தை இப் பக்கத்தில் ஒளிப்படமாகக் காணலாம்.

என்ன விஷயம்?

ராஜராஜன் தேவாரப் பதிகங்கள் சில ஓதப்படுவதைக் கேட்டான். எல்லா தேவாரங்களையும் திரட்டிப் பாதுகாக்க

# வாளேந்தும் கரங்களில் ஓலைச் சுவடிகள்!



* சிவசங்கரன் ஸ்தபதி



* நம்பியாண்டார் நம்பி



* ராஜராஜன்

விரும்பினான். கிடைக்கவில்லை.

நம்பியாண்டார் நம்பிகளின் உதவியை நாடினான். நம்பி, தாம் வழிபட்ட பிள்ளையாரின் திருவடிகளைப் பணிய, ''தில்லைச் சிற்றம்பலத்தின் மேற்குப் பிராகாரத் திருள்ள கை முத்திரை யிட்டுப் பூட்டப்பெற்ற நில வறைக்குள்ளே அவை உள'' என விநாயகரும் திருவாய்மலர்ந்தருளினார்.

மன்னன் மகிழ்ந்து, நம்பியுடன் தில்லைச் சிற்றம்பலத்தை அடைந்

தான். தில்லைவாழ் அந்தணரோ, ''மூவர் முதலிகள் நேரில் வந்தா லொழிய அறை திறக்கப்படக் கூடாது'' என்றனர்.

மன்னன் ஆணை பிறப்பிக்கவில்லை; பணிந்தான். ஆதிரைத் திருநாளன்று விழா எடுத்து, தேவார மூவர் ஐம்பொன் திருமேனிகளை நிலவறை முன் எழுந்தருளச் செய்தான். வேறு வழி யின்றி முத்திரைகள் உடைக்கப்பட்டு, அறைக் கதவுகள் அந்தணரால் திறக்கப்பட்டன.

ஓலைச் சுவடிகள் இருந்த இடத்தில் கறையான் புற்றுக்கள் காணப்பட்டன. மன்னன் திகைத்து நிற்க, அசரீரி எழுந்தது : ''சைவ நெறித் தலைவரெனும் மூவர் பாடல் வேய்ந்தன போல் மண்மூடச் செய்தே ஈண்டு வேண்டுவன வைத்தோம்.''

இதைக் கேட்டு ராஜராஜன் மகிழ்ச்சி யுற்று, தனக்கு உதவிய நம்பியாண்டார் நம்பியைப் பணிந்தான். தேவார முதலிகள் ஒவ்வொரு பதிகத்தையும் எந்தப் பண்ணில் அமைத்துப் பாடினார்களோ அதே பண் ணில் திரும்ப அமைத்துப் பாடப்படுவதை மன்னன் விரும்பினான்.

எருக்கத்தம்புலியூர் என்ற தலத்தில் இறைவனை வணங்கி, பண் அமைக்கும் பணி சிறக்க வேண்டினான். மறுபடி அசரீரி ஒலித்தது : ''திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் தோன்றிய மதங்க சூளாமணி என்ற மங்கைக்குப் பண் அமைக்கும் அருள் புரிந்துள்ளோம்!''

அவ்வாறே மன்னன் மதங்க சூளா மணியை அணுகி, இந்த ஒப்பற்ற தெய்வீகப் பணியை நிறைவேற்றி மங்காப் புகழடைந்தான்.

இந்த நிகழ்ச்சியை நினைவூட்டும் வகையில்தான் இராஜராஜனுக்கும் நம்பி யாண்டார் நம்பிக்கும் பஞ்சலோகத் திரு மேனி உருவாக்கப்பட்டுள்ளது. எழில் மிக்க இத்தப் படிமங்கள் அண்மையில் ஈழத்துத் திருக்கேதீச்சரத்தில் நிறுவப் பட்டன. இவற்றைத் திறம்படச் செய்தவர் கும்பகோணம் சிவசங்கரன்ஸ்தபதி.

இத்தகைய திருக்கோலத்தில் மாமன்னன் ராஜராஜனின் திருமேனிப் படிமமோ கற்சிலையோ வேறெங்கும் இல்லை.

– நமசிவாயம்

விஷ்வக்சேனன்

## 38. மித்ர பேதம்

காற்றில் எழுந்த விர்ரென்ற ஒலி, சமுத்திரபந்தனை மின்னல் வேகத்தில் திரும்ப வைத்தது. வீரனான அவன் ரத்தத்தில் ஊறி, அவனுக்கு மிகவும் பழகிய ஒலி அது. பயிற்சிக் களங்களிலும், போர்களிலும் கேட்டு ரசித்த ஒலி. அபாயத்தையும் அதில் ஒரு லயிப்பையும் ஏற்படுத்தும் ஒலி. காற்றைக் கிழித்து அம்பொன்று பாயும் ஒலி.

அந்த ஒலி காதில் விழுந்ததுமே சட்டென்று விலகித் திரும்பியவன், அந்த அம்பு, தான் நின்ற இடத்திற்குச் சற்றுத் தள்ளியே பாய்ந்ததையும், மரத்தில் பாய்ந்து நின்றதையும் கவனித்து, அது தன் பார்வையில் படவேண்டுமென்பதற்காகவே எய்யப்பட்டது என்பதைப் புரிந்து கொண்டான். மரத்திலிருந்து அதைப் பிடுங்கியவன், அதில் மெல்லிய நறுக்கோலையொன்று இணைக்கப்பட்டிருப்பதைக் கண்டு, லேசான வியப்புடன் ஓலையை எடுத்துக் கொண்டு, அம்பை அருகே மண்டிக் கிடந்த புதர்கள் நோக்கி விட்டெறிந்தான்.

சுற்றிலும் ஒருமுறை பார்வையைச் செலுத்தியவன், இடதுபுறத்தில் தெரிந்த அரண்மனை வாயிலையும் உலவிய வீரர்களையும் கண்டு வலதுபுறம் திரும்பினான். சற்றுத் தொலைவில் மரங்களடர்ந்த பகுதியிருப்பதைக் கண்டு, அம்பு அங்கிருந்துதான் வந்திருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டான். அத்தனை தொலைவிலிருந்து இத்தனை சரியாக அம்பெய்தவன் யாராயிருந்தாலும் அவன் மிகுந்த திறமைசாலியாக இருக்க வேண்டும் என்று எண்ணிய சமுத்திரபந்தனது முகத்தில் பாராட்டாக முறுவல் ஒன்று அரும்பியது.

ஓலையில் ஒரு வரிதான் இருந்தது : ''உறையூரிலிருந்து படை இன்று உதயத்தில் கிளம்பி விட்டது.'' அந்த ஒரே வரி, கொற்கையில் பணிகளை முடித்துக் கொண்டு உடனடியாகக் கிளம்ப வேண்டும் என்பதை உணர்த்தியது; வடக்கிலிருந்து சோழர் படைகள் அனைத்தும் திரும்பி விட்டன என்பதை உணர்த்தியது; கோட்டாற்றுப் போரைத் தொடங்குமுன் சேரனைத் தாக்கவும் அவன் கடற்படைத் தளத்தை அழிக்கவும் முன்னேற்பாடுகளைச் செயல்படுத்த வேண்டும் என்பதை உணர்த்தியது; பாண்டிய அரியணையின் பூசல் விரைவில் ஒரு முடிவுக்கு வரவிருப்பதையும் சோழ நாட்டின் எல்லை குமரி வரை நீண்டு பெரும் சாம்ராஜ்யமாக மாற இருப்பதையும் உணர்த்தியது.

சில வினாடிகள் அப்படியே நின்றிருந்த சமுத்திரபந்தன், ஓலையைத் துகள்களாக்கிக் காற்றில் பறக்க விட்டான். அரண்மனையை நோக்கி நடந்தான். மாறவர்மனும் மார்த்தாண்டனும் படைகளை அனுப்பச் சென்றிருப்பதை அறிந்து, பாசறை அமைந்திருந்த பகுதியை அடைந்து, அங்கு உலவியபடி தனது திட்டங்களை வகுத்துக் கொள்ள ஆரம்பித்தான்.

கதிரவன் உச்சியை நெருங்கிய சமயம்



# பாண்டியன் மகள்

திரும்பிய இருவரையும் புன்முறுவலோடு வரவேற்றான் சமுத்திரபந்தன்.

''உங்களைக் காக்க வைத்ததற்கு மன்னிக்க வேண்டும்'' என்றபடி வந்த மார்த்தாண்டன், ''வாருங்கள். உள்ளே சென்று அமர்ந்து பேசலாம்'' என்றான். மூவருக்கும் உணவு கொண்டு வரப் பணித்து விட்டு, ''சமுத்திரபந்தரே, மந்திராலோசனை முடிந்தபின் உங்களை இப்போதுதான் பார்க்கிறேன்'' என்றான்.

''ஆம். நேற்று முன்னிரவிலிருந்து நான் அரண்மனையில் இல்லை.'' சமுத்திரபந்தனது பதில் சாவதானமாக வந்தது.

''பின் எங்கிருந்தீர்கள்?''

''இரவு முழுவதும் ஈழத்து இளவலுடன் அவரது கலத்திலிருந்தேன்.''

மார்த்தாண்டன் விழிகளும் மாறவர்மன் விழிகளும் ஒருமுறை சந்தித்து மீண்டன.

சமுத்திரபந்தனின் நேரடியான பதில் இருவரையும் அயரவைத்தது.

''சமுத்திரபந்தரே, நீங்கள் எங்களுக்கு ஓர் உதவி புரிய வேண்டும்.'' - மார்த்தாண்டன் குரலில் சற்று குழைவு முதன் முறையாக ஒலித்தது.

சமுத்திரபந்தன் முகத்தில் போலியான வியப்பு பரவியது.

''உங்களுக்கு உதவத்தானே சேரலாதர் என்னை இங்கு அனுப்பியிருக்கிறார்'' என்றான்.

''படையனுப்பி உதவுவதை மட்டும் குறிப்பிடவில்லை நான்.''

''வேறு என்ன செய்ய வேண்டும்? கூறுங்கள். இயன்றதைச் செய்கிறேன்.''

''நீங்கள் நிச்சயம் செய்யக் கூடியது தான்.''

''கூறுங்கள், காத்திருக்கிறேன்.''

சற்று மௌனம் சாதித்த மார்த்தாண்டனின் குரல் பெரிதும் தாழ்ந்து ஒலித்தது.

''மாறவர்மருக்கெதிராக இங்கு ஒரு சதி நடப்பதாக அவர் சந்தேகப்படுகிறார்.''

''என்ன? இது அவருடைய கோட்டை. இங்கு அவருக்கெதிராக யார் செயல்பட முடியும்?'' - மீண்டும் போலியான வியப்புடன் கேட்டான் சமுத்திரபந்தன்.

''உண்மைதான். ஆனால் மாறவர்மருக்குப் பதிலாக மதுரை அரியணையில் குலசேகரனை அமர்த்த ஈழத்து இளவரசன் முயற்சி செய்வதாக ஒரு செய்தி முன்னமே வந்தது.''

''அப்படியா!''

''ஆம். நீங்கள் நேற்றிரவு முழுதும் அவனுடன் இருந்திருக்கிறீர்கள். தன் கட்சிக்குப் பலம் சேர்க்க அவன் உங்களையும் தன் பக்கம் இழுக்க முயற்சி செய்திருப்பான் என எதிர்பார்த்தேன்.''

"இன்கம் டாக்ஸ் ஃபைல் கேட்டா ஏன் தலையைச் சொறிஞ்சுக்கிட்டு நிக்கறே?"

"கிளார்க் ராமசாமியோட தூக்கம் கெடுமேன்னு பார்க்கறேன் சார்!"

- எஸ். முகம்மது யூசுப்.

சமுத்திரபந்தனின் புத்தி புரவி வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. இந்த அரிய சந்தர்ப்பம் தனது பணியை மிக எளிதாக்குகிறது என்பதை அவன் புரிந்து கொண்டான். இந்தச் சிறிய சந்தேக விதையை விரைவில் பெரும் விருட்சமாக ஆக்கி விடுவது என்றும் தீர்மானித்தான்.

சதியைப் பற்றி சமுத்திரபந்தன் ஏதோ அறிந்திருப்பதாகவும் அதை வெளியிடத் தயங்குவதாகவும் அவன் மௌனத்தைப் புரிந்து கொண்ட மாறவர்மன் மனம் அலைபாயத் தொடங்கியது.

''உங்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாதபடி பார்த்துக் கொள்கிறோம். நீங்கள் அறிந்ததை அச்சமின்றிக் கூறுங்கள்'' - மாறவர்மன் படபடவென்று பேசினான்.

சமுத்திரபந்தன் புன்னகையுடன் அவனை நோக்கினான்.

''சமுத்திரபந்தன் இதுவரை யாருக்கும் அஞ்சியதாகச் சரித்திரம் கிடையாது மாறவர்மரே! நான் வந்தது படை உதவி செய்யத்தான். பாண்டியர் உட்பூசல்களில் தலையிடத் தயங்கியே நான் மௌனமாயிருந்தேன்.''

''மாறவர்மனுக்கெதிராகச் சதி செய்பவர் வெற்றி பெற்றால் உங்கள் படை உதவியின் நோக்கமும் நிறைவேறாதல்லவா?'' - மார்த்தாண்டனின் கேள்வி சற்று உஷ்ணமாகவே வந்தது.

''உண்மைதான்'' என்று ஒப்புக் கொண்ட சமுத்திரபந்தன், ''மார்த்தாண்டரே, நான் அறிந்ததைக் கூறுகிறேன். நீங்கள் குறிப்பிட்டபடி சதியொன்று நடப்பது உண்மைதான்'' என்றான்.

மாறவர்மன் முகம் சிவந்தது. சமுத்திரபந்தன் தொடர்ந்தான் : ''மாறவர்மரை அப்புறப்படுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்பது தெரியும். ஆனால் அதை எப்படி சாதிக்கப் போகிறார்கள் என்பது நான் அறியாதது. கொல்வதா, அல்லது • சிறைப்பிடித்து ஈழத்துக்கு அனுப்பி விடுவதா? கொல்வது என்றால் உணவில் விஷமிட்டுக் கொல்வதா? அம்பெய்து கொல்ல உத்தேசமா? அல்லது போர் நடக்கும் போது வேலெறிந்து மாய்க்க உத்தேசமா என்பது எதுவும் எனக்குத் தெரியாது.''

சமுத்திரபந்தன் சொல்லச் சொல்ல



மாறவர்மனது முகம் விகாரப்பட்டுப் போயிற்று. இனி தான் நிம்மதியாக உண்ணவோ, உறங்கவோ, சுதந்திரமாக உலவவோ, ஏன் துணிந்து முன்னணியில் நின்று போரிடவோ கூட இயலாது என்று புரிந்து கொண்ட மாறவர்மன், பெரும் சங்கடத்தில் மூழ்கினான்.

மார்த்தாண்டன் முகத்தில் அனல் பறந்தது.

''இப்போதே அவர்களைத் தீர்த்து விடுகிறேன்'' - ஆவேசமாக எழுந்தான் அவன்.

''பொறுங்கள்'' என்று அவனைக் கையமர்த்திய சமுத்திரபந்தன், ''இதில் மிக நிதானமாகச் செயல்பட வேண்டும். உதவிக்கு வந்தவனுடன் வெறும் சந்தேகத்தின் பேரில் சண்டையிடச் செல்வது குழப்பத்தை உண்டாக்கும். தகுந்த ஆதாரமின்றி இந்தச் சதியை நிரூபிப்பதோ, உடைப்பதோ கடினம்.''

''பின் என்ன செய்வது?''

''அவனைத் தீவிரமாக கண்காணிக்க வேண்டும். குலசேகரனுக்கு ஈழத்து இளவரசியை மணமுடித்து மதுரை அரியணையில் அமர்த்துவதன் மூலம், பாண்டிய நாட்டில் ஈழத்து ஆதிக்கம் ஏற்பட வழி செய்கிறான் பராக்கிரமபாகு.

மாறவர்மன் ரத்தம் கொதித்தது. மூச்சில் அனல் பறந்தது.

''இன்னும் கேளுங்கள். போர் தொடங்கியவுடன் கொற்கையைத் தன் கலங்களையும் அதன் வீரர்களையும் கொண்டு கைப்பற்றவும் உத்தேசித்திருக்கிறான் அவன்.''

''அவன் கலங்கள் அத்துமீறி உள்ளே நுழையுமானால் அவற்றைக் கொளுத்த யந்திரத் தூண்களை இயக்குமாறு இப்போதே உத்தர விடுகிறேன்'' என்றான் மாறவர்மன்.

சமுத்திரபந்தனின் கரம் அவனைத் தேக்கியது.

''அதிலும் பயனில்லை, மாறவர்மரே! யந்திரங்களை இயக்க ஈழ வீரர்கள் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்.''

அவன் கூறுவது உண்மையென்பது மாறவர்மனுக்கும் மார்த்தாண்டனுக்கும் புரிந்தது. ஈழத்து வீரர்கள் யந்திரங்களை இயக்குவதை மாறவர்மனே பலமுறை கண்டிருக்கிறான். அவர்களுக்கு அதிக இடமளித்த தவறை இப்போது உணர்ந்தான்.

சமுத்திரபந்தனுக்கே மாறவர்மனைக் கண்டு பச்சாதாபமேற்பட்டது.

''என்ன செய்யலாமென்று நீங்கள் எண்ணுகிறீர்கள்?'' - மார்த்தாண்டன் குரலில் குழப்பமிருந்தது.

சமுத்திரபந்தன் நிதானமாகக் கூற ஆரம்பித்தான்.

''இப்போதுள்ள நிலையில், அதுவும் போர் மூளக்கூடிய இந்த நேரத்தில், உதவிக்கு வந்தவரைப் பகைத்துக் கொள்வது அத்தனை உசிதமல்ல. ஆனால் சதிக்கு முதற் காரணமாயிருப்பவன் குலசேகரன். அவன் நடவடிக்கைகளைக் கண்காணிக்கவும் அவசியமானால் சிறை செய்யவும் ஏற்பாடு செய்து வைப்பது நல்லது. தகுந்த ஆதாரமின்றிக் குலசேகரன் மீது கை வைப்பதை மற்ற பாண்டியரும் எதிர்க்க முற்படுவார்கள். அது மேலும் சிக்கல்களை உருவாக்கி விடும்.''

சமுத்திரபந்தன் கூறியவை அப்பட்டமான உண்மை என்பது இருவருக்கும் புரிந்தது.

''பராக்கிரமபாகுவை என்ன காரணம் கூறி மடக்குவது?'' மார்த்தாண்டன் கேட்டான்.

இந்தக் கேள்வி சமுத்திரபந்தன் முகத்தில் ஒரு புன்னகையைத் தோன்ற வைத்தது. அடுத்து அவன் கேட்ட கேள்வி இருவரையும் திகைக்க வைத்தது.

''மாறவர்மரே, உமது மெய்க்காவலன் மாடத்தேவன் எங்கே?''

மாறவர்மன் முகத்தில் லேசான கலவரம் படர்ந்தது. ''நேற்றிரவு முதல் அவனைக் காணவில்லை சமுத்திரபந்தரே!'' என்றான் அவன்.

''நேற்றிரவு நான் பராக்கிரமபாகுவுடன் கடற்கரையில் சென்ற போது மாடத்தேவன் இறந்து கிடந்தான்.''

''என்ன!'' இருவரும் அதிர்ச்சியில் இருக்கையை விட்டு எழுந்தே விட்டனர்.

''பராக்கிரமபாகு அவனை எடுத்துச் சென்று புதைத்து விட பரதவர்களுக்கு உத்தரவிட்டார். யாரிடமும் இதைப் பற்றி மூச்சு விடக் கூடாதென்றும் எச்சரித்தார்'' என்றான் சமுத்திரபந்தன்.

திகைத்த இருவரும் சுயநிலை பெற சற்று நேரமாகியது.

''பரதவர் குடியிருப்பில் தீர விசாரித்தால் உண்மை தெரியும்'' என்றான் சமுத்திரபந்தன்.

''மாடத் தேவனை அவர் ஏன் கொல்ல வேண்டும்?''

''அது பற்றி நான் அறியவில்லை. அவர் பரதவரை எச்சரித்ததைத்தான் கேட்டேன்... மாறவர்மரே, இன்னொரு முக்கிய

விஷயம். இதுவரையில் நான் கூறியவற்றை என்னிடமிருந்துதான் நீங்கள் அறிந்ததாக எவரிடமும் கூறக் கூடாது. அனாவசிய சிக்கல்களில் என் பெயர் அடிபடுவதை சேர மன்னர் விரும்ப மாட்டார்.''

''எவரிடமும் கூற மாட்டோம்'' - இரு குரல்களும் சேர்ந்து ஒலித்தன.

''உங்கள் நலனில் உள்ள அக்கறையால் தான் நான் இத்தனையும் கூறினேன். பராக்கிரமபாகு மற்றொரு முக்கிய விஷயத்தையும் உங்களிடமிருந்து' மறைத்திருக்கிறார்'' என்றான் சமுத்திரபந்தன்.

''என்ன அது?''

''இந்தப் போரின் முடிவில் உங்களை நீக்கியபின் மதுரை அரியணையில் குலசேகரனை அமர்த்துவான் பராக்கிரமபாகு... அதோடு...''



''வலித்தெல்லாம் ஒரே வலி!''
''திடீர்னு ஏன் வலிக்குது?''
''ஒரு வீட்டு எலியைத் தின்னுட்டேன். அது என்ன பூச்சி மருந்து தெளிச்ச தானியத்தைத் தின்னு தொலைச்சதோ!''
- எஸ். விஜயா சீனிவாசன்.

''மேலே கூறுங்கள்.''

''அப்போதே அவனுக்கு ஈழத்து இளவரசியை மணமுடிக்கத் திட்டம். அதனால் அவளையும் போர் முடியும் வரை கொற்கையிலேயே தங்க வைப்பது என்று முடிவெடுத்திருக்கிறான்.''

''அவள் இந்த ஏற்பாடுகளுக்கு ஒப்புக் கொண்டாளா?''

''ஒப்புக் கொள்வதாவது? குலசேகரனுக்கு அரியணை ஆசையையும் தன்னை மணக்கும் ஆசையையும் ஊட்டிச் சம்மதிக்க வைத்தவளே அவள்தான்!''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''அஞ்சனாதேவியே என்னிடம் கூறினாள்!''

''என்ன! அஞ்சனாதேவியே கூறினாளா? ஒரே இரவில் ஈழத்திற்குச் சென்று அவளைச் சந்தித்து வந்தீர்களா?'' - மாறவர்மன் கேட்டான்.

சமுத்திரபந்தன் முகத்தில் குறுநகை தோன்றியது.

''அஞ்சனாதேவியைச் சந்திக்க இப்போது ஈழத்திற்குச் செல்ல வேண்டியதில்லை. அவள் கொற்கையில்தான் இருக்கிறாள்!''

சமுத்திரபந்தன் கூறிய வார்த்தைகளில் மந்திரம் ஏதோ இருந்திருக்க வேண்டும். அவை மாறவர்மனைச் சிலையாக நிறுத்தி விட்டன.

''கொற்கையில் எங்கிருக்கிறாள்?'' மார்த்தாண்டனின் கேள்வி எழுந்தது.

''துறைமுகத்தில் நிற்கும் ஈழத்துக் கலங்களில் இரண்டாவதில்.''

**மா**றவர்மன் தலை சுழலத் தொடங்கியது. அஞ்சனா தேவி இத்தனை அருகில் இருப்பாளென்பதையோ, அவள் வருகையைப் பராக்கிரமபாகு மறைத்து வைப்பான் என்பதையோ அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

ஏதேதோ எண்ணங்கள் அவன் மனத்தில் எழுந்து அவனை அலைக்கழித்தன. ஈழத்தில் பராக்கிரமபாகு கூறியவை நினைவில் எழுந்தன. சீனத்துப் பட்டில் வன தேவதை போல் அஞ்சனாதேவி நின்ற கோலமும் அவள் விழிகள் பளிச்பளிச் சென்று தன்னைப் பார்த்து நகைத்ததையும் எண்ணினான். பராக்கிரமபாகுவின் அறையை விட்டு வெளியே வந்த போது, அவன் பின்னாலிருந்து நகைத்த ஒலி அவன் செவிகளில் மீண்டும் வந்து மோதின.

குழம்பிய நிலையில் நின்ற இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டான் சமுத்திரபந்தன். ''நான் சேரநாட்டுக்குப் பயணப்பட வேண்டும். விடைபெற்றுக் கொள்கிறேன்.'' வெளியே வந்து அரண்மனையை அடுத்த புரவிக் கொட்டடியை நோக்கி நடந்தான்.

நீண்ட நேரம் கழித்த பின்னரே நிதானத்துக்கு வந்த மார்த்தாண்டன், பரதவரை விசாரிக்க வீரர்களை ஏவினான். ஒருவனை அன்று மாலையே வீரர்கள் மார்த்தாண்டன் முன் நிறுத்தினர்.

மார்த்தாண்டவர்மனின் உக்கிரமான பார்வையைக் கண்டு நடுங்கிய பரதவன், மாடத்தேவன் உடலை அப்புறப்படுத்த பராக்கிரமபாகு உத்தரவிட்டதையும், எவரிடமும் தெரிவிக்க வேண்டாமென எச்சரித்ததையும் ஒப்புக் கொண்டான். உயிர் பிரியு முன் இறுதியாக, ''சமுத்திரபந்தன்'' என்று ஆரம்பித்து ஏதோ கூற மாடத்தேவன் முயன்றதையும் தெரி வித்தான் பரதவன்.

ஏற்கெனவே குழம்பிய நிலையிலிருந்த மாறவர்மனையும் மார்த்தாண்டனையும் இந்தத் தகவல் இன்னும் குழப்பியது.

(தொடரும்)

# ஒற்றை விருட்சம்

ரகுநாதனின் அப்பா சிம்மம் போல கர்ஜித்தார்.

''ஏய்... இன்னிக்கு நடக்கறது வைதீகக் காரியம்... குழந்தைக்கு நாம கரணம் சூட்டிட்டு எல்லாரும் சாப்பிட்டதுக்கு அப்புறமாத்தான் நீ அந்தப் பரதேசிக் கும்பலை உள்ளே விடணும்... உங்க அம்மாவுக்கு ஒரு மண்ணும் புரியாது... எடுத்த எடுப்புல ராமாத்தா வாரிசுகளோட வயித்தை ரொப்பிடணும் அவளுக்கு... போய்ச் சொல்லு...''

ரகுநாதன் தாயைப் பார்க்க - சமையலறைப் பக்கம் நகருகிறார்.

அப்பா கிழித்த கோட்டை இது வரையில் அவன் தாய் விசாலி தாண்டியதே இல்லை என்றாலும், இந்த ராமாத்தா விஷயத்தில் மட்டும் அவள் ஏன் இப்படி தீராத வசவு வாங்கிக் கட்டிக் கொள்கிறாள் என்பதுதான் புரியவில்லை.

அப்பா மட்டும் திட்டவில்லை. குடும்பத்தில் உள்ள அரை டிக்கெட்டுகள் கூட அவ்வப்பொழுது பாட்டியைக் கேலி செய்யும்.

''பாட்டிக்கு ராமாத்தாதாண்டா பர்சனல் செகரட்டரி...''

''இல்லேடி... அந்த நாளுல - மகாராணிங்க கல்யாணமாகி வர்றப்ப, பொறந்த வீட்டுல இருந்து சேடிப் பொண்ணுங்களை அழைச்சிட்டு வருவாங்களாமே. அது மாதிரி பாட்டியும், ராமாத்தாவை தன்னோட கூட்டிட்டு வந்திருக்காங்க...''

ரகுநாதன் கூட எத்தனையோ முறை சொல்லிப் பார்த்து விட்டார்.

''அம்மா... எழுபத்தியொம்பது வயசுக்கும் குழந்தையாவே இருக்கே... ஏதோ கிராமத்துல இருந்தப்ப இவ உனக்கு உதவியா இருந்தா சரி... இந்த பட்டண வாழ்க்கையில... இவளையும் கூடவே வச்சுக்கணும்னு...''

''பட்டணமோ, கிராமமோ... நமக்கு என்னடா குறைச்சல்? நாதி இல்லாதவ...''

''அவ மட்டுமா... அவளோட பொண்ணு...''

''புருஷன் போயிட்டதுக்கு அப்புறம் பொம்மனாட்டி எங்கே போவா... ஏதோ ரெண்டு பேரப் பசங்க... படிப்பு ஏறலையின்னாலும் நாம காலால இட்ட வேலையத் தலையாலே செஞ்சிட்டு, நாய்க் குட்டி மாதிரி நம்ம காலையே சுத்தி வரல்லையா... உங்க அப்பாவுக்கு என்ன... மனுஷ வாடையே கூடாது. அதுவும் என்னைச் சேர்ந்தவன்னா...''

என்பதை நெருங்கிக் கொண்டிருக்கும் அம்மா - குழந்தை போல விசும்பி விசும்பி அழுவதைக் கண்டு வாயடைத்துப் போவதைத் தவிர வேறு வழி தெரியாது ரகுநாதனுக்கு.

ஆனால் இவர்தான் இப்படி... இவர் மனைவி லலிதாவுக்கு ராமாத்தாள் குடும்பம் தான் ஜென்மப் பகை... அதுவும் ராமாத்தாளின் பெண் சிகப்பியுடன் தினம் ஒரு பொழுதாவது சுத்தி ஓய்ந்தால்தான் அவளுக்குச் சோறே இறங்கும்.

''அந்த சனியனுக்கு ஆனாலும் திமிரு... என்கிட்டே கேட்டா நடக்காதுன்னு தெரியும். நேரே அம்மாகிட்டே போய்க் கேட்டு இத்தனை



அனுராதா ரமணன்

மாவடு வாங்கிண்டு போயிருக்கு. உங்கம் மாவுக்கு வயசாறதே தவிர கொஞ்சம் கூட சமர்த்து போறாது. வீட்டுல இருக்கற பழக, வண்டு வந்தது.. இப்படி இருக்கற பண்டங் களைத் தூக்கித்தான் வேலைக்காரங்களுக் குப் போட்டுப் பார்த்திருக்கேன். இப்படி புத்தம் புதுசா நேத்துப் போட்டதை இன் னிக்கு தூக்கிக் கொடுக்கும் பரோபகாரி உங்கம்மாதான்னு நினைக்கிறேன்...''

லலிதா சொன்னது போதாதென்று பெற்ற பிள்ளைகள்.. இப்பொழுது சென்ற வருடம் அடியெடுத்து வைத்த மருமகள் பிரியா கூட....

''பாட்டி தான்கூட சாப்பிடறதில்லே... ராமாத்தாவுக்குத் தன் கையாலே பரி மாறிட்டு, அப்புறம்தான் இலையில் உட் கார்றார்...''

இவர்களின் அத்தனை எரிச்சலுக்கும் - விசாலிப் பாட்டி ஒரேயொரு பதிலைத்தான் சொல்லுவாள் :

''நீங்க எல்லாம் நேத்துப் பொறந் தவங்க... பதினாறு வயசுல கல்யாணமாகி - இருபத்தி மூணு வயசு வரைக்கும் ஒரு பூவையோ, பிஞ்சையோ கண்ணால பார்க் காம - உங்க தாத்தாகிட்டேயும், அவர் அம்மாகிட்டேயும் நாயடி பட்டவ நான். இருந்து இருந்து அபூர்வமா உண்டானேன் உங்கப்பாவை... பிரசவத்துக்கு கிராமத்துக் குப் போனேன். தவசா தவசிருந்து பெத்த பிள்ளை.. பாலுக்கு அழுதா - என்கிட்டே சங்குப் பால் கூட இல்லே... 'சுவாமீ என்ன பாவம் செஞ் சேன்'னு 'ஓ'ன்னு அழுவேன்... அப்ப வந்து சேர்ந்தவ தான் இந்த ராமாத்தா......... கையில சிகப்பி ரெண்டு வயசுக் குழந்தை... ரெண் டாவது வயித்துல இருக்கறப்பவே அப்பன் பாம்பு கடிச்சுப் போயிட் டான்... குழந்தை யும் பிரசவத்துல போயிடுத்து... பாலுக்காக வச்ச ஆளுதான்'' ராமாத் தாள். இன்னிக்கும் என் பிள்ளை இப் படி கம்பீரமா வளர்ந்து, லட்சக் கணக்குல சம்பா திக்கிறான்னா....... அன்னிக்கு ராமாத்தா ஊட்டின அமிர்தத் துனாலதான்... நன்றி மறக்கக் கூடாது...''

நிஜம்தான்... நன்றி மறக்கக் கூடாது தான்... வேண்டுமானால் வருஷத்துக்கு இத் தனை மூட்டை நெல், துணிமணி... கொடுத்து கிராமத்தோடு போய் இருக்கச் சொல்ல வேண்டியதுதானே.. எதற்காக மடியில் பூனையைக் கட்டிக் கொண்டு சகுனம் பார்க்கப் போவது போல, வீட்டில் நடக்கிற எல்லா நல்லது பொல்லாததற்கும் அவளைக் கூப்பிட வேண்டுமாம்?

ரகுநாதனின் தந்தை பரமேஸ்வரனுக்கு - எண்பத்தைந்து வயசுக்கும் ஆசாரம்... அனுஷ்டானம் எதிலும் குறை இருக்கக் கூடாது.

இத்தனை வயசுக்கும் பெண்டாட்டி தான் சாப்பாடு பரிமாற வேண்டும்.

இவர் கூப்பிடுகிற நேரம் பார்த்துக் கிழவி - ராமாத்தாள் கிழவியின் கால் கட்டிக்கு வேப்பிலையும் மஞ்சளும் வைத்து அரைத்துக் கட்டிக் கொண்டிருப்பாள்.

''ஏய் சனியனே... உனக்கு நான் புருஷனா இல்லே அவளா...''

''எதுக்காக இப்படிக் கத்தணும். எல் லாருக்கும் ஒரே திரேகம்தானே...''

ரகுநாதனுக்கே ஆச்சர்யமாக இருக்கும். இந்த அம்மாவா ஒரு காலத்தில் புருஷனிட மும், மாமியாரிடமும் அடிபட்டு, மிதிபட் டாள் என்று...

இப்பொழுதும் பரமேஸ்வரன் வாய்



விட்டு அலுத்துக் கொள்வார் :

''எப்ப கல்யாணமாகி ரெண்டு வருஷமாகியும் குழந்தை பொறக்கலையோ - அப்பவே நான் ரெண்டாந்தாரமா வேற எவளையாவது இழுத்துட்டு வந்திருக்கணும்டீ... உனக்குக் குழந்தை பொறந்த அதிருஷ்டம் உனக்கு என் வீட்டுல இடம் கிடைச்சதுமில்லாம, அந்த கருமாந்தரங்களுக்கும் ராஜ மரியாதை கிடைக்கறது..''

''இப்ப இத்தனை சொல்றவர், குழந்தை பாலுக்கு வேற என்ன ஏற்பாடு செய்தாப்பல.. அது. 'வறாட் வறாட்'டுனு அழறப்ப எல்லாம், தூக்கி என் கையில திணிச்சு, 'ஓடு ராமாத்தா கிட்டே... வயித்தை ரொப்பிக் கொண்டா'ன்னு கூச்சல் போட்டதெல்லாம் மறந்து போச்சாக்கும்... தினமும் கடவுளுக்குப் பாலாலே தேவால அபிஷேகம் செய்யலாம். ஆனா - குழந்தைக்கு ஒரு வாய் பாலுக்கு - கரன்சி நோட்டை வச்சிட்டு எதுவும் செய்ய முடியாது..''



''ஏற்கெனவே வெளி வந்த கதையை மறுபடி எழுதறது தப்புன்னு நினைச்சு எழுதாமல் விட்டது தப்பாப் போச்சு?''

''அதுக்கு என்ன இப்போ?''

''அதையே, வேறு ஒருத்தர் எழுதிட்டாரே!''

- வலங்கைமான் நூர்தீன்.

விசாலியும் கத்துவாள்.

அவளுக்கு ரகுநாதன் ஒரே குழந்தையே தவிர அவருக்குப் பெண் இரண்டு, பிள்ளை இரண்டு என கப்பும் கிளையுமாய்க் குடும்பம் தழைத்து விட்டது...

விசாலியே சொல்வது போல செல்வத்துக்குக் குறைச்சலே இல்லை.. பரமேஸ்வரன் சொத்தே ஐந்தாறு தலைமுறைக்கு வரும். ரகுநாதன் அதற்கும் மேலேயே போய் விட்டார்.

வீட்டில் எப்பொழுதும் பத்து இலை அதிகப்படியாக இருந்து கொண்டேயிருக்கும்.

ராமாத்தாளின் குடும்பம் சாப்பிடுவது ஒன்றும் பெரிசில்லை...

ஆனால் போட்டதைச் சாப்பிட்டு ஒதுங்கிக் கிடக்க மாட்டாள் அவள்..

அத்தனை வயசுக்கும் இடிப்பதும், புடைப்பதும் பத்து ஆள் வேலை செய்வாள்... அதே சமயம், வீட்டில் உள்ள மற்ற வேலையாட்களையும், குழந்தைகளையும் ஏன் ரகுநாதனையே கூட விரட்டிக் கொண்டே இருப்பாள்.

''இந்த கிழவியோட மிரட்டலுக்குப் பயந்து எந்த வேலைக்காரியும் நம் வீட்டுல ரெண்டு நாளைக்கு மேல தங்க மாட்டேங்கறா... உங்க அம்மாவானா ராமாத்தாவுக்கும் அவ பொண்ணுக்கும் வி.ஐ.பி. மரியாதைதான் தராணும்கறார்.. யாரோ என்னவோ செஞ்சிட்டுப் போகட்டும்னு விட வேண்டியதுதானே...''

- இது லலிதா.

''அவ இருக்காளோ வீடு இந்த மட்டுக்கும் நாறாம இருக்கு. பட்டணத்துல எவளுக்குமே பித்தளைப் பாத்திரத்தைப் புளி போட்டுத் தேய்க்கத் தெரியலைடா ரகு.. உங்க அப்பா இத்தனை கரிக்கிறாரே அந்த ராமாத்தாவை... பூஜை பாத்திரம்னு தினமும் ஒரு வண்டி சாமான் போடறாரே தேய்க்க... யார் தேய்ச்சுத் துடைச்சு வைக்கறதுன்னு நினைக்கறே...''

''சரிதாம்மா... நாம போடற சாப்பாட்டுக்கும், கொடுக்கற துணிமணிக்கும் அதுவாவது செஞ்சிட்டுப் போகட்டுமே.. நீதான் கொஞ்சம் சும்மாயிறேன்...''

''ஆங்... அது சரி. தலையெழுத்தா என்ன...''

விசாலி சீறிக் கொண்டு கிளம்புவாள்.

அதே போல் பட்டணமே கொள்ளை போனாலும் விடிகாலை ஐந்தரை மணிக்கே கள்ளிச் சொட்டு காப்பி...

விசாலி தானே கலந்து எடுத்துக் கொண்டு, புழக்கடைப் பக்கம் போய் விடுவாள்.

''சிகப்பி.. ஆத்தாவை எழுப்பு. காப்பி ஆறினா அவளுக்குப் பிடிக்காது...''

தோட்டத்தில் வீடு என்று பெயர்தானே ஒழிய எப்பொழுதும் குடும்பமே இங்கே தான்.

வீட்டில் யாருக்குக் கல்யாணம், வைபோகம் என்றாலும் முதல் புடைவை ராமாத்தாளுக்குத்தான்.

பல சமயங்களில் அவளே தடுத்தும் கூட கொண்டு போய்க் கைகளில் திணிப்பாள் விசாலி..

இதோ -

ரகுநாதனின் பிள்ளை கோபியின் மனைவிக்கு தலைச்சன் பிறந்திருக்கிறது..

பிறந்த வீட்டில் அத்தனை அனுசரணை போதாததால் இங்கேயே எல்லாம்.

ராமாத்தாள் ஆஸ்பத்திரியே கதியாகக் கிடந்தாள். இது மாதிரி சமயங்களில் மட்டும் லலிதா வாயைத் திறக்க மாட்டாள். குழந்தையை எடுக்க, மடியில் வைத்து செவ்வெண்ணெய் புகட்ட ஒரு பெரிய தேவையாக இருக்கிறதே..

லலிதாவின் நாலு பிரசவத்தின் போதும்

ராமாத்தாள்தான் அருகில் இருந்தாள் என்றாலும், அப்பொழுது அவளுக்கு இதன் அருமை தெரியவில்லை.

ஏனெனில் அவளுக்குப் பிறந்த வீட்டுச் செல்வாக்கு அதிகம்.

ஒவ்வொரு குழந்தையையும் விசாலி, முதலில் ராமாத்தாளின் கையில்தான் கொடுப்பாள்.

''ஆகி வந்த கை...''

''உக்கும்... கிட்ட வந்தாலே தென்ன மரக்குடி எண்ணெய் நாத்தம் நார்றது.. கிழவி தினம் குளிக்கிறாளோ.. இல்லை தட்டுப் போடற சத்தம் கேட்டு ஓடி வந்துடறாளோ தெரியலே.. எப்படித்தான் இவகிட்ட பால் குடிச்சு வளர்ந்தீங்களோ... அவ மூக்கு நுனியில வண்டு உட்கார்ந்திருக்கிற மாதிரி ஒரு கறுப்பு மரு இருக்கே.. அதைப் பார்த்தே குழந்தைகள் பயந்து அலறப் போறதேயின்னு நெஞ்சு அடிச்சுக்கும் எனக்கு.''

- லலிதா சொல்லுவாள்.

பரமேஸ்வரன் கூட எப்பொழுதாவது கொஞ்சம் குளிர்ந்திருக்கும் சமயத்தில் மனைவியிடம் கிண்டல் செய்வார் :

''ஆமா.. உன் சிநேகிதி வாராளே எங்கே... மூக்கு நுனியில உலகத்தைச் சுமந்துட்டுத் திரிவாளே...''

குழந்தைகள் 'கொல்'லெனச் சிரிக்கும்...

ரகுநாதன் அம்மாவைத் தேடி சமையற்கட்டுக்குப் போக - புதுக் குழந்தை வீறிடும் ஒலி பக்கத்திலிருந்த குளியலறையிலிருந்து வருகிறது.

''லலிதா... அம்மா எங்கே...''

''ராமாத்தா குழந்தையைக் குளிப்பாட்டறா... அம்மா அங்கேதான் இருப்பா.. ஏன்...''

''ஒரு இருபது ரூபா கொடு. அப்பா கத்தறார். இன்னிக்கும் அந்த கும்பலைக் கூப்பிட்டுப் பந்தியில உட்கார வைக்காதேயின்னு... ராமாத்தா பேரன்கிட்டே சொல்லிடபன் காப்பி வெளியில பார்த்துக்கச் சொல்றேன்...''

லலிதா அடுப்பு எண்ணெயில் மிதக்கும் வடைகளைக் கரண்டியால் புரட்டி விட்டு, ரவிக்கையில் செருகியிருந்த ரூபாய்த் தாளில் இரண்டு பத்து ரூபாயை எடுத்து நீட்ட...

அவர் அதை வாங்கிக் கொண்டு குளியலறைப் பக்கம் நகர...

உள்ளிருந்து பேச்சுக் குரல்...

''இந்தா அம்மா சாப்பிடு சாப்பிடுன்னு எல்லார் முன்னாடியும் உருவாதே... குழந்தைங்க எல்லாம் இட்டுது... இப்ப என்னா...



''எப்பப் பார்த்தாலும் இன்னும் ஒரு மாதத்துல ஷூட்டிங் ஆரம்பிச்சிடும்னு சொல்றீங்க... படத்துக்கு என்ன பேர்தான் வச்சிருக்கீங்க?''

''ஓ!..கனவுகளே... கனவுகளே....''

- மோகன் ராஜ்.

ஒரு நாளு வெளில சாப்பிடக் கூடாதா நான்...''

''அது என்ன அப்படி சொல்லிட்டே ராமாத்தா... இன்னிக்கு இந்த வீட்டுல நான் வாழுறது உன்னாலே... புருஷன்தான் செத்துட்டான்... புள்ளையாவது தங்கியிருக்கேயின்னு அன்னிக்கு நீ நினைச்சிருந்தா... என் நிலைமை என்ன சொல்லு... பத்து மாசம் சுமந்து பெத்து குழியில வச்சிட்டேன்னு சொல்லியிருந்தா - என் நிலை என்ன...''

''வயசாச்சே தவிர உனக்கு நிசமாலுமே புத்தியே இல்லே கிழவி... அம்பத்தியஞ்சு வருஷமாச்சு.. நானே மறந்துட்டேன். நீ என்னமோ நேத்து நடந்தாப்பல கிடந்து அலட்டிக்கறியே... எனக்கு வடை பாயச சோறெல்லாம் வேணாம்... உன் கையாலே நிறைய தின்னாச்சு... செத்தா ரகு கையாலே ஒரு பிடி அரிசி.. ஒரு பொட்டு கங்கைத் தண்ணி.. மத்தது எல்லாம் சிகப்பி பசங்க பார்த்துப்பானுங்க.. அட... இதைப் பாரு... என்னமோ புரிஞ்ச மாதிரி சிரிக்குது...''

ரகுநாதன் அடித்து வைத்த சிலையாய் வெளியிலேயே நிற்கிறார்.

''என்ன ரகு.. பேரனைப் பார்த்தியா... செவசெவன்னு எப்படியிருக்கான் பாரு.. இவன் வந்துதான் உன் பெண்டாட்டி வாயை அடைக்கணும்...''

ராமாத்தாள், டவலில் சுற்றிய ரோஜாச் செண்டை ரகுநாதனின் முன் நீட்டுகிறாள்.

கண் கரக்க, நெஞ்சடைக்க - அவள் கையிலிருந்த பச்சைக் குழந்தையை வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார் அவர்...

குழந்தை நிஜமாகவே ரோஜாச் செண்டுதான்.. அதனால்தானோ என்னவோ மூக்கு நுனியில் மிளகளவு ஈ.

அவர் ஒற்றை விரலால் மெள்ளத் தடவ...

''அது ஈ இல்லேடா.. மச்சம்...''

விசாலியின் குரல் பின்னாலிருந்து.

# சக்கரவர்த்தித் திருமகன்

ராமனுடைய துயரம் வர வரக் கடல் போல் பொங்கிற்று. உன்மத்த நிலை அடைந்து விட்டான். ஒவ்வொரு மரமாகச் சென்று, அவற்றைக் கூவி யழைத்துப் பிரலாபிக்க ஆரம்பித்தான்.

''அசோக மரமே! உனக்கு நன்றாகத் தெரியும். சீதை எங்கே என்று சொல்லு வாய். என் சோகத்தைத் தீர்க்க மாட் டாயா?''

''ஓ, பனை மரமே! அவள் எங்கே இருக்கிறாள்? உனக்குக் கட்டாயம் தெரி யும். சொல்வாயே!''

இவ்வாறு செடி, கொடி, மரம் ஒவ் வொன்றையும் கட்டிக் கொண்டு அழுது கேட்டுக் கொண்டே பைத்தியம் பிடித்த வனாக வனமெல்லாம் திரிந்தான்.

வனத்தில் கண்ட மிருகங்களை யெல்லாம் இம்மாதிரியே கேட்டுக் கொண்டு அலைந்தான்.

''ஏ, புலியே! அந்த யானையும் மானும் எனக்கு உண்மை சொல்லப் பயப்படுகின்றன. உனக்குத்தான் பயம் என்பது இல்லையே, நீயாவது சொல். உனக்குக் கட்டாயம் தெரியும்.''

இப்படியெல்லாம் சொல்லிச் சொல்லி அழுதான்.

''ஒளிந்து கொண்டிருக்கிறாய். அதோ பார்த்து விட்டேன். போதும் உன் விளையாட்டு. இனி நிறுத்து. என் னால் பொறுக்க முடியவில்லை'' என்று சொல்லி அழுதான்.

இவ்வாறு பிதற்றிக் கொண்டும், அழுது கொண்டும் சுற்றிலுமுள்ள காடெல்லாம் தேடிச் சென்றான். எங் கும் காணாமல் துக்கம் மேலிட்டு, ''ஹா லக்ஷ் மணா, ஹா சீதே!'' என்று கதறித் தரையில் விழுந்தான்.

''லக்ஷ்மணா! எங்குமில்லை சீதை! அவளை அரக்கர்கள் பிடித்து அங்கம் அங்கமாகப் பிய்த்துத் தின்று விட்டார் கள். நான் இனி என்ன செய்வேன்? உயிர் தங்காது. தந்தை தசரத மகா ராஜாவைப் போய்ச் சேருவேன். ஐயோ! அங்கும், 'மகனே, நான் இட்ட ஆணை யைத் தீர்க்காமல் ஏன் முன்னால் வந்து விட்டாய்?' என்று தந்தை கோபிப்பார். நான் கெட்டேன்!'' என்று சேற்றில் அகப்பட்ட யானையைப் போல் வீரிட்டு அழுதான்.

இவ்வாறு ராமன் துயரப்பட்டு, நிலையிழந்து உன்மத்தனைப் போல் கஷ்டப்படுவதைக் கண்டு சகிக்க முடி யாமல் லக்ஷ்மணன் சொன்னான் :

''அண்ணா இப்படி அழுவது தகாது. இருவரும் சேர்ந்து காடு முழு வதும் தேடிப் பார்ப்போம். உனக்குத் தெரியுமே, சீதை குகைகளிலும் வனங் களிலும் சஞ்சரிப்பதில் மிகப் பிரிய முடையவள். ஆற்றில் குளிப்பதிலும் விளையாடுவதிலும் புஷ்பங்கள் பறிப் பதிலும் மிகவும் ஆசை கொண்டு எங்கேயோ விளையாடிக் கொண்டிருக் கிறாள். பார்ப்போம், நம்மைச் சோதிக் கவே இப்படி அவள் விளையாட்டாகச் செய்கிறாள். வா, இருவரும் தேடு வோம். பிரலாபிக்காதே!''

இருவரும் காடு, மலை, ஆறு, தடாகம் ஒரு இடம் விடாமல் தேடினார் கள்.

**ராஜாஜி**

''எங்கும் காண வில்லை, லக்ஷ்மணா! நான் என்ன செய்

வேன்?'' என்றான் ராமன்.

''புலம்பாதே, அண்ணா! மகா விஷ்ணு பலிச்சக்கரவர்த்தியை அடக்கி மூன்று உலகத்தையும் அடைந்தது போல் நீ சீதையை அடைவாய். நிச்சயம், தைரியம் இழக்காதே!'' என்றான் லக்ஷ்மணன்.

''இல்லை, தம்பி! தேடிப் பார்த்தாயிற்று. சீதை எங்குமில்லை. அவளை இழந்தேன். என் உயிர் இனி எனக்கு வேண்டியதில்லை'' என்றான் ராமன்.

ஒரு முகூர்த்த நேரம் நினைவிழந்து கிடந்தான். பிறகு நினைவு வந்ததும் 'ஐயோ' என்று துயரம் தாங்காமல் உரத்த குரலில் அழ ஆரம்பித்தான். லக்ஷ்மணன் எவ்வளவு சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை.

''லக்ஷ்மணா! என்னால் இனி என்றைக்கும் அயோத்தி போக முடியாது. சீதையை அழைத்துக் கொண்டு வனம் சென்றவன் அவளைப் பாதுகாக்க வகையில்லாதவன், அவளை அரக்கர்களுக்குத் தின்னும்படி கொடுத்து விட்டுத் தனியாகத் திரும்பி வந்தான் என்று உலகமெல்லாம் என்னை இகழும். ஜனகருக்கு நான் என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவேன்? நீ போய் நம் தாய்மார்களைக் கவனித்துக் கொள். பரதனை ஆலிங்கனம் செய்து எனக்காக அவனுக்குச் சொல்லி விடு. 'நீயே அரசன்; தேசத்தை நீயே அரசனாக இருந்து ஆள்வாய். ராமன் உனக்கு ஆக்ஞையிட்டு விட்டான்' என்று சொல்லிவிடு'' என்றான்.

லக்ஷ்மணன் எவ்வளவு தேறுதல் செய்ய முயற்சித்தும் பயன் படவில்லை. சீதையை ராக்ஷசர்கள் தூக்கிச் சென்று உடலைப் பிய்த்துப் பிய்த்துத் தின்று விட்டார்கள் என்று தீர்மானித்து விட்டான். நரமாமிசம் தின்னும் அரக்கர்களிடம் அவள் படும் இம்சையைக் கற்பனை செய்து, அதை விவரித்துச் சொல்லிச் சொல்லி அழுது கொண்டேயிருந்தான்.

''நான் பெரும் பாபங்களைச் செய்தவனாக இருக்க



வேண்டும். இல்லாவிடில் எனக்கு இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்திருக்குமா? என்னுடன் வந்த சீதை அரக்கர்களுக்கு உணவாகப் போனதை நான் சகிக்க வேண்டியதாயிற்றே! என்னைப் போன்ற பாபி உலகத்திலே வேறு ஒருவனுமில்லை'' என்றான்.

''அண்ணா, இப்படி நீ மன நிலையை இழந்து விடலாமா? தைரியத்தை இழந்தவர்கள் ஒரு முயற்சியையும் எடுக்க முடியாது. துக்கத்தை அடக்கியாண்டு மனத்தை ஸ்திரப் படுத்திக் கொள். விதியை முயற்சியால் வெல்ல வேண்டும். அப்படி வெற்றி பெறுவதற்கு மனத்திலின்று அதைரியத்தை விலக்கித் தைரியம் உண்டாக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறுதான் உலகத்தில் தைரியசாலிகள் காரியசித்தியடைகிறார்கள். வனம் முழுதும் தேடிப் பார்ப்போம். சோகத்தில் மூழ்கிப் போகாதே! தைரியசாலிகளுடைய வழியைப் பின்பற்றுவோம்'' என்று லக்ஷ்மணன் பலவாறு சொல்லிப் பார்த்தான். ஆனால் ராமனுடைய அளவு கடந்த துயரத்தில் அது பயனில்லாமல் போயிற்று.

ராமன் தன்னை ஒரு மனிதனாகத் தான் கருதினான். தன்னை விஷ்ணுவாக அறியவில்லை என்பதற்கு இந்தக் கட்டம் சந்தேகமற்ற அத்தாட்சியாகும். சில இடங்களில் நிகழ்ச்சிகளும் பேச்சுகளும் வேறு அபிப்பிராயத்துக்கு இடம் தந்தாலும் இந்தக் கட்டத்தில் வால்மீகி, ராமனை மனிதனாகத்தான் வர்ணித்திருக்கிறார். உயிரைக் காட்டிலும் பிரியமான மனைவி அரக்கர்கள் நிறைந்த வனத்தில் காணாமற் போனால் மேம்பட்ட குணமுள்ள ஒரு புருஷன் எவ்விதம் நடந்து கொள்ளுவானோ அந்த விதத்திலேதான் ராமனுடைய மன நிலையும் நடத்தையும் இருக்கக் காண்கிறோம். தம்பி ஆறுதல் கூறியும் பயன் ஏற்படாத நிலையில் ராமன் இருப்பதைக் காண்கிறோம்.

ராமாவதாரத்தில் சாதாரண தருமம் விளக்கப்படுகிறது. தருமத்தோடு வளர்ந்த காதல் எவ்வாறிருக்கும், எவ்வாறிருக்க வேண்டும் என்பதைப் பார்க்கிறோம். மனைவியின் காதலுக்குப் புருஷனுடைய காதல் குறைவாக இருக்கலாகாது என்பதை இந்தக் கட்டத்தில் நன்றாகப் பார்க்கலாம்.

இந்த நிகழ்ச்சிகளை ஆத்மீக முறையிலும் எடுத்துக் கொண்டு ஓரளவு பயன்படுத்திக் கொள்ளலாம். ஒரு ஆன்மா வழி தப்பிப் போனால் பகவானுடைய திருவுள்ளம் எந்த அளவில் துன்பப்படுகிறது என்பதை சீதா வியோகத்தில் சித்திரிக்கப் பட்டிருக்கிறது என்றும் வைத்துக் கொள்ளலாம்.

பகவானுக்கு நஷ்டமேது, துன்பமேது என்று கேட்கலாம். சர்வம் பகவத் லீலை, எல்லாம் பகவானுடைய திருவிளையாடல் என்று உணர்ந்து விட்டோமானால் ஒரு விமர்சனமும் அதற்கு மேல் வேண்டியதில்லை. பாவம், புண்ணியம், பக்தி இவையெல்லாம் அந்த லீலையில் ஒரு பாகம். ஆண்டவனுக்கு நாம் ஒவ்வொருவரும் காதல் மனைவியைப் போலாவோம். நாம் எந்தக் காரணத்தினாலுமே வழி தப்பிப் போனால் ஆண்டவனுக்குக் காதல் மனைவியை இழந்த துக்கம் உண்டாகும். அந்த துக்கம் அவன் விளையாட்டில் ஒரு பாகம்.

(தொடரும்)



# கோமதியா

**கோ**மதியையும் குழந்தைகளையும் பற்றிய நினைப்போடியது பார்த்திபனுக்கு. இந்த இரவு நேரத் தில் என்ன செய்து கொண் டிருப்பார்களோ என்று கற்பனை பண்ணிப் பார்த்தான். பெரிய பையனைப் பற்றிக் கவலையில்லை. நான்கு வயது. மற்ற சிறுவர்களுடன் சேர்ந்து ஓடியாடி விளையாடிக் கொண்டிருக்கலாம். சின்னதுக்குத் தான் ஒரு வருடம். ஒரே இடத்தில் இருக்காமல் நண்டு போல வளைய வரும் பிராயம். இந்த வயதில்தான் குழந்தைகள் மீது மிகவும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டுமென்று எப்போதோ படித்திருந்தது ஞாபகத்துக்கு வந்து நெருடியது அவனை. எச்சரிக்கை யாய் இருப்பாளா கோமதி? அவளுக்கென்ன, அண்ணன் வீட்டுக் கல்யாணக் காரியங்களெல்லாம் தன் தலை மேல்தான் நடப்பதாக ஓரிடத்திலும் உட்காராமல், ஓய்வெடுக்காமல் ஓடியாடிப் பறந்து கொண்டிருப்பாள். அதனால்தான் கல்யாணத்துக்கு இரண்டு நாட்களுக்கு முன்பே அண்ணன் வீட்டுக்குப் போய் விட வேண்டுமென்று அடம்பிடித்திருந்தாள்.

அவளையும் குழந்தைகளையும் காலையில்தான் பஸ் ஏற்றி அனுப்பி விட்டு வந்திருந்தான் பார்த்திபன். அவனுக்கும் அவர்களுடன் செல்ல மனமில்லாமலில்லை. அவனோடு சேர்ந்த தபால்காரன் ஒரு வாரம் மருத்துவ விடுப் பில் சென்றிருந்ததால் அவனால் நகர முடியாமல் போயிற்று.

'ஞாயிற்றுக் கிழமை காலையில வந்திருங்க. வரும்போது கட்டாயம் நான் சொன்னது மாதிரி செஞ்சிட்டு வாங்க.'

நேற்றிரவு முழுதும் எவ்வளவுதான் விவாதம் பண்ணியும் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று ஒற்றைக் காலில் நிற்பவளுக்கு என்ன பதில் சொல்ல?

'சரி... பார்க்கிறேன்.'

அவள் அண்ணனின் மூத்த பெண்ணுக்குக் கல்யாணம்

என்பதால் அன்பளிப்பைப் பெரிதாய்ச் செய்ய வேண்டு மென்று அவனிடம் அடம்பிடித்திருந்தாள். பார்த்திபனுக்கு உதைப்பாயிருந்தது.

'நீதான் அண்ணன் அண்ணன்னு உருகுறே. அவருக்கு உன் மேலவெல்லாம் பாசமே கிடையாது, புரிஞ்சுக்க. நமக்கு ரெண்டு குழந்தைங்க பொறந்திருக்கு - இதுவரைக்கும் ஒரு முழத் துணி எடுத்துப் போட்டிருப்பாரா அதுகளுக்கு? நாம மட்டுமேன் பெரிசாச் செய்யணுமிங்கிற? ஒரு நூறு ரூபாய் வச்சிட்டு வந்திருவோம்.'

'அதென்ன அப்படிச் சொல்லிட்டீங்க.. என் அண்ணன் தான் நம்மளோட கல்யாணத்த நடத்தி வச்சாரு.'

''ஆமா வச்சாரு. உனக்கு அப்பா அம்மா இல்லாததுனால செஞ்சி தொலைக்க வேண்டிய கடனேன்னு செஞ்சிருக்காரு. நமக்குச் செய்யறதுக்கு அவருக்கு மனசில்லை. நாம ஏன் அவ ருக்குப் பெரிசாச் செய்யணும்?'

'ஆமா, அவரைக் கொறை சொல்றதுதான் உங்களுக்குப் பொழைப்பாய்ப் போச்சு. இந்தக் கல்யாணத்தோட நம்ம பயலுக்கு ரெண்டு பவுன்ல செயின் பண்ணிப் போடுறதா என் கிட்ட சொல்லியிருக்காரு அண்ணன். சொன்ன மாதிரி செய்யு றாரா இல்லியான்னு பாருங்க. அதுக்காகவாவது நாம எப்படியும் ஒரு ஐநூறு ரூபாயாவது கவர்ல வச்சிக் குடுத்திடணுமுங்க.'

முகம் மலரச் சொல்லியிருந்தாள் கோமதி. அவள் மூக்கு நுனியில் பெருமை சிலிர்த்துக் கொண்டு நின்றிருந்தது. அவ னுக்குச் சற்று மலைப்பாகத்தான் இருந்தது. ஆயிரத்தை யொட்டிக் கிடைக்கிற மாதச் சம்பளம். அதில்தான் நான்கு ஜீவன்களின் வயிறுகளும் நனைய வேண்டிய கஷ்ட ஜீவனம். இதிலெப்படி ஐநூறைத் திரட்டுவது?

# சொன்னாள்!

அதற்கும் வழி அவளேதான் சொல்லியிருந்தாள்.

'ஒங்க ஆபீசிலதான் யாரோ வட்டிக்குக் குடுக்கிறதாச் சொல்லுவீங்களே, ஐநூறு கேட்டுப் பாருங்க. நாலஞ்சி மாசத் துல சரிக்கட்டாமலா போயிடுவோம்.'

கோமதி கோட்டை கட்டிவிட்டாள். சுக்குநூறாய் அதை இடித்து நொறுக்க இஷ்டம் வரவில்லை அவனுக்கு. மௌன மாக இருந்து கொண்டான் - சம்மதத்திற்கு அடையாளமாக.

அபிமானி



''நம்ப பொண்ணுக்குப் பார்த்திருக்கிறது டாக்டர் பையன்னு தரகர் நம்மை ஏமாத்திட்டார்!''

''எப்படி?''

''அவன் ஒரு டாக்டரோட பையன் அவ்வளவு தான்!''

- ஞா. ஞானமுத்து

ஞாயிற்றுக் கிழமை காலையில் அவன் கல்யாண வீடு போய்ச் சேர்ந்ததும் சேராததுமாய் கோமதி கேட்ட முதல் கேள்வி : ''என்னங்க... ஐநூறு ரூபாய் வாங்கிட்டு வந்திருக்கீங் கல்ல?''

மௌனமாய்த் தலையாட்டிக் கொண்டே குழந்தையை வாங்கிக் கொண்டான் பார்த்திபன். கல்யாண நெருக்கடியில் வீடு திமிலோகப்பட்டுக் கொண்டுதானிருந்தது. தெரிந்த முகங்களிடம் கூட மனம் விட்டுப் பேச முடியாத அவசரம். பட்டுச் சேலை பட்டு வேட்டிகள் துலங்க பகட்டாய்த் திரிந்த மனிதர்கள். கோமதியின் அண்ணனும் அண்ணியும் அவனைக் கண்டு

நெருங்கி வந்து சம்பிரதாயமாய் வரவேற்றுக் கொண்டார்கள்.

எங்கும் சரிகை இழைகளே தழைந்து நெளிந்தன மண்டப விதானத்தில். கண்ணைச் சிமிட்டும் ஜோடனைகள். ஒளிக்கோலங்களில் கல்யாண மேடை மனதைக் கிறக்கியது. விஸ்தாரமான மண்டபந்தான். இந்தக் கிராமத்தில் இப்படியொரு மண்டபமா என்றே பார்த்திபனுக்கு வியப்படையத் தோன்றியது.

மேடைக்கு அடுத்தாற்போலிருந்த முன்வரிசை நாற்காலி ஒன்றில் பவ்யமாகப் பார்த்திபன் அமர்ந்து கொண்டான். பக்கத்து நாற்காலியில் அவன் மகன். அந்த நெரிசலான ஜனங்களில் கோமதியைக் கண்டு கொள்வதுதான் பெரும்பாடாகப் போயிற்று அவனுக்கு. எப்போதோ ஒரு தடவை கையில் குழந்தையுடன் மேடையருகே வந்து விட்டுப் போனாள். சுற்றியிருந்தவர்களிடம் ஏதோ சொல்லி விட்டுப் படக்கென்று உள்ளே போய் விட்டாள். அத்தனை அவசரம் அவளுக்கு.

மாப்பிள்ளையை அழைத்து வந்து மேடையில் அமர்த்தினார்கள். நேர்த்தியாய்த் தெரிந்தான் பையன். உத்தியோகம் மட்டுமா புருச லட்சணம்? குறைவில்லாத உடம்பும் உறுதியான மனமும் புருச லட்சணங்கள்தான்.

பெண்களின் புடைசூழலில் சற்றைக்கெல்லாம் மணப்பெண் வந்தாள். அவளின் வளர்த்தியையும் வனப்பையும் பார்க்கவே பார்த்திபனுக்கு வியப்பாயிருந்தது. கோமதியை அவன் கைப்பிடித்துக் கொண்ட ஐந்து வருசத்துக்கு முந்திய நாளில் பாவாடை சட்டையில் நோஞ்சானாய்த் தெரிந்தவள் அவள். இப்போது உருவமும் மாறி தேகத்திலும் ஒரு வாளிப்பைச் சுமந்து...

அவளைச் சாதாரணமாய் நடக்க விடாதபடி பட்டுச் சேலை முரண்டு பண்ணியிருக்க வேண்டும். கஷ்டப்பட்டு வந்தாள் அவள். கழுத்து, கைகள், நெற்றியில் என்று தேகமெங்கும் சுமக்க முடியாத பாரத்தில் தொங்கி வழிந்த நகைகள் வேறு.

சம்பிரதாய சடங்குகள் எல்லாம் நடந்தேறி... மணப்பெண் கழுத்தில் மங்கல நாண் ஏறி... மணமேடை வலம் வந்து... வாழ்த்துரைத்து முடிக்கிற

வரைக்கும் பார்த்திபனின் பக்கமே வரவில்லை கோமதி.

**ப**ந்திகள் முடிந்து, அவரவர் தங்களால் முடிந்த அன்பளிப்புகளைத் தந்து விட்டு, வெற்றிலைச் சீவலின் குதப்பலோடு விடைபெற்றுக் கொண்டிருந்த போதுதான் கோமதி அவசர அவசரமாக ஓடி வந்தாள் பார்த்திபனிடம். வயிறு புடைக்கச் சாப்பிட்டு விட்டு சுவாரஸ்யமாய் சேரில் அமர்ந்து வெற்றிலைத் தளிரில் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்தான் அவன்.

''என்னங்க...''

''வாம்மா, கல்யாண வீட்டுக்காரி. ஆளையே கண்டுபிடிக்க முடியலை. ரொம்ப வேலையோ! கொஞ்சம் உட்கார்ந்து ஓய்வெடுத்திட்டுப் போ.''

''சும்மாயிருங்க... கிண்டல் பண்ற நேரமா இது?''

''ஏன், என்னாச்சு?''

''பணம் வச்சிட்டீங்களா?''

''இல்ல... இனிமேதான் வைக்கணும்.''

''நூறு ரூபாய் வச்சாப் போதும். ஐநூறு வேண்டாம்.''

''என்ன, திடீர் ஞானோதயம்?''

''பின்ன என்னங்க... கல்யாணத்து அன்னிக்கே நம்ம பிள்ளைக்குச் செயின் போடுறேன்னு சொல்லியிருந்தாரில்ல? இப்போது முடியாதாம். கல்யாணத்துக்கு ஏகப்பட்ட செலவாகிப் போச்சாம். பெறகு போடுறேங்கிறாரு. எப்பவும் இப்படியேதான் சொல்லிக்கிட்டிருக்காரு. வேண்டாம். இவரு செயினும் போட வேண்டாம் கியினும் போட வேண்டாம். எல்லாரையும் போல நாமும் நம்மால முடிஞ்ச பணத்தை வச்சிட்டுப் போவோம்.''

கண்கள் கலங்கியிருந்தன கோமதிக்கு. முகத்தில் கலவரம் தெரிந்தது. வார்த்தைகளில் மட்டும் உறுதி பளிச்சிட்டதை அவனால் துல்லியமாய் உணர்ந்து கொள்ள முடிந்தது. இப்போதாவது தனது பங்களிப்பு எவ்வளவு என்பதைச் சரியாகப் புரிந்து கொண்டாளே என்று கோமதியை நினைத்துப் பார்த்த போது பார்த்திபனுக்குச் சந்தோஷமாயிருந்தது.



* ஒரு சன்னதி
* ஆணிவேர்
* லேட்டஸ்ட் விருது

# கலைஞர், வாழப்பாடி, ஜெயலலிதா — இவர்களின் பலம் எது?

● ஆர். பாலு, திருச்சி.

? "இரண்டு ஆண்டு கால ஆட்சியில் முதல்வரின் ஊழல் 1000 கோடி ரூபாய்" என வாழப்பாடி குற்றம்சாட்டியுள்ளாரே?

! ஹா◌ம். ஆயிரம் கோடி இந்த நாளில் ஒரு பெரிய தொகையா என்ன!

● சம்பத், வேலாயுதம்பாளையம்.

? "எந்தவிதமான காரணமுமின்றி அ.தி.மு.க. அரசைக் கலைக்க மாட்டோம்" என்று எஸ்.பி.சவான் கூறுகிறாரே?

! காரணம் அகப்பட்டால் கூடக் கலைக்க யோசிப்பார்கள். அந்த தார்மிக பலம் இன்று மத்திய அரசிடம் இல்லை.

● என். ரமேஷ், திருப்பாதிரிப்புலியூர்.

? சி.பி.ஐ.யின் செயல்பாடு பற்றி...?

! சென்னை ஆர்.எஸ்.எஸ். அலுவலக குண்டு வெடிப்பில் சம்பந்தப்பட்டவர்களை ஒரு மாதத்துக்குள் இனம் கண்டு சொன்னது திருப்தி தருகிறது. (பிடிப்பதிலும் சுறுசுறுப்புக் காட்டினால் நல்லது.) அதே சமயம் சி.பி.ஐ. முன்னாள் இயக்குனர் மாதவனுக்கு, ஜனாதிபதி பதக்கத்தை விருது வழங்கும் விழாவில் பெற அழைப்பு அனுப்பாமலிருந்து, ஒரு போலீஸ்காரர் மூலம் கொடுத்தனுப்பியது அருவருப்பை உண்டாக்குகிறது. (மறதிக்காரர்களுக்கு : ஹர்ஷத் மேத்தா விவகாரத்தில், உண்மைகளைக் கண்டறிய முடியாமல் அரசியல் தலையீடு இருப்பதாகக் கூறி, பதவி துறந்தவர் மாதவன்.)

● எம். பிரபு, குமராட்சி.

? பெரிய அதிர்ச்சி தந்த விஷயம் எது?

! " "ஆசிரியர் போராட்டம் எதற்கு?" என ஓர் ஆசிரியரிடம் கேட்டேன்; "இன்னும் சற்று ஓய்வெடுத்து அதிக சம்பளம் வாங்கத்தான்" என கமெண்ட் அடித்தார். மனம் வேதனை அடைந்தது; நீங்க என்ன நினைக்கிறீங்க?" என்று ஏ. ஜஹ்பர் காதர் எழுதி அனுப்பியுள்ள கேள்விதான்!

● வாசுதேவன், பம்பாய்.

? சேதுபதி IPS எப்படி?

! வாசு படம்தானே! வால்டரில் மிச்சம் மீதி ஏதாவது இருந்திருக்கும்!

● சி. சீனிவாசன், திருத்துறைப்பூண்டி.

? பாலஸ்தீனிய மக்களுக்கு நல்ல காலம் பிறந்தது போல் தமிழ் ஈழ மக்களுக்கு நல்ல காலம் எப்போது பிறக்கும்?

! ஈழத்தில் ஓர் அராஃபத் தோன்றும்போது.

● தா. சிந்துகுமார், திருவட்டார்.

? திருச்சியில் குஷ்புவுக்குக் கோவில் கட்டியவர்கள் இனி என்ன செய்வார்கள்?

! பக்கத்தில் பிரபுவுக்கு ஒரு சன்னதி அமைக்காமலா போய் விடுவார்கள்!

● பூங்குழலி, கெங்கவல்லி.

? ரஜினிக்கு ஆதரவாகப் பேசியதால் ஹெக்டேக்கு எதிராகக் கன்னட தீவிரவாதிகள் ஆர்ப்பாட்டம் நடத்தினார்களே?

! ஹெக்டே சந்திக்காத ஆர்ப்பாட்டமா? சமாளித்துக் கொள்வார்.

● நவவானதி, பழவந்தாங்கல்.

? "அலை ஓசை" 92-ம் ஆண்டின் சிறந்த தொலைக்காட்சித் தொடர் என மயிலாப்பூர் அகாடமி தேர்ந்தெடுத்தது பற்றி...?

! சிறந்த நாவல், சிதைக்கப்படாமல் தொலைக்காட்சித் தொடரில் இடம்பெற முடியும் என்று நிரூபித்த அளவில் அலை ஓசை டி.வி தொடர் பரிசுக்குரியதே. என்றாலும் அதை இன்னும் சிறப்பாகச் செய்திருக்க முடியுமே என்ற எண்ணம் தொடரைப் பார்த்த போது எழாமலில்லை.

● சி. ராமதாஸ், சென்னை - 23.

? வைர விழாக் காணும் தினமணி குறித்து...?

! ஏ.என். சிவராமன் ஆணிவேர்; கோயங்கா - அடி மரம்; எஸ்.வி. சுவாமி - பரவிய கிளைகள்; இன்றைய இளைஞர் பட்டாளம் - பழுத்துக் குலுங்கும் கனிகள்.

● லஷ்மி பாலகிருஷ்ணன், மதுரை.

*? "என்னிடம் எந்த கெட்ட பழக்கமும் இல்லை எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுங்கள்" என்று பழனி காங்கிரஸ் வேட்பாளர் கூறியுள்ளாரே?*

! "எதற்கு வாய்ப்புத் தருவது? கெட்டுப் போகவா?" என்று வாக்காளர்கள் யோசித்திருந்தால் வியப்பில்லை.

● ஜெயா சீனிவாசன், கும்பகோணம்.

*? மேற்கு வங்கத்தில் வளர்ந்த மாதிரி வீதி நாடகங்கள் நம் தமிழகத்தில் வளரவில்லையே...?*

! யார் சொன்னது? வீதிக்கு வீதி தண்ணீர்க் குட நாடகம்; அரசியல் கத்திக் குத்து நாடகம்; தேர்தல் கார் உடைப்பு நாடகம்; எல்லாம்தான் அமோகமாக நடக்கிறதே!

● ஆர். ரவி, பம்பாய்.

*? உங்கள் மனம் கவர்ந்த எழுத்தாளர்?*

! பட்டியல் போட்டால் விட்டுப் போனவர்கள் முதுகில் 'டின்' கட்டி விடுவார்கள்.



* காரணம் இருப்பினும்... * அழைப்பு இல்லை! * பிரதமருடன் பிணக்கு * தமிழ்த் தொண்டு

அதனால் லேட்டஸ்ட்டாக ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருது பெற்ற விக்கிரமனும் என் மனம் கவர்ந்தவர் என்று கூறி நழுவிக் கொள்கிறேன்.

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

*? ஒத்தப் பாலம் தொகுதியில் மூன்று முறை ஜெயித்த இ. காங்கிரஸ் இந்த முறை*

## நீங்கள் கேட்டவை - தராசு

*தோல்வி கண்டது பற்றி...?*

! முஸ்லிம் வாக்காளர்களைப் பகைத்துக் கொண்டு விட்டதுதான் காரணம் என்று கருணாகரன் கூறப் போக, இப்போது பிரதமர் நரசிம்மராவ் கருணாகரனுடன் பகைத்துக் கொண்டு விட்டார்!

● எஸ். ஏ. ரேவதி,
திருவெண்ணெய்நல்லூர்.

*? ஏழைகளின் நண்பன் எனப்படும் தபால் கார்டுகள் மெட்ரோ சானல்களில் போட்டி என்ற முறையில் வீணாக்கப்படுவது முறையா?*

! மெய்யாலும் போட்டியாக இருந்தாலும் தேவலாமே; பரிசுச் சீட்டு மாதிரி அல்லவா ஆகி விட்டது தபால் கார்டு! அடுத்த வருஷ பட்ஜெட்டில் அதன் விலை உயரத்தான் போகிறது!

● ஜே. குத்தூஸ், ஆவூர்.

*? அரசியல்வாதிகளின் வானுயர்ந்த கட்-அவுட்டைப் பார்க்கும் போது உங்களுக்கு என்ன தோன்றும்?*

! எப்போது கீழே விழுந்து, யார் உயிரைப் பலிவாங்கப் போகிறதோ, என்றுதான்.

● எஸ். எஸ். பூங்கதிர்,
திருவெண்ணெய்நல்லூர்.

*? கலைஞரின் பலம் எது? ஜெயலலிதாவின் பலம் எது? வாழப்பாடியின் பலம் எது?*

! பேச்சு; பணம்; அறிக்கை.

● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

*? சமீபத்தில் என்ன புத்தகம் படித்தீர்கள்?*

! "படித்தேன்" என்பதை விட பொள்ளாச்சி நா. மகாலிங்கம் வீட்டில் "பார்த்தேன்" என்று கூறலாம். செய்யுட்கள் பல தமிழில் காணப்பட்டன. அவற்றுக்கு முன்னும் பின்னும் ஒரே ஹிந்தி மயம்! விசாரித்ததில், தமிழ் சைவ பக்தி இலக்கியப் பாக்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைத் தமிழில் படிப்பது போலவே ஹிந்தியில் ஒலிமாற்றம் செய்து, பிறகு பொழிப்புரை, கருத்துரை, விளக்கவுரை எல்லாம் ஹிந்தியில் தரப்பட்டுள்ளன என அறிந்தேன். அரிய, அருமையான தமிழ்த் தொண்டு ஆற்றியுள்ளார் நா. மகாலிங்கம், இந்தப் பெரும் பணியில் டாக்டர் ரவீந்திரகுமாரை ஈடுபடுத்தியதன் மூலம்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
சி. சீனிவாசன்,
88, மருத்துவமனை தெரு,
திருத்துறைப்பூண்டி - 614 713.

# 10

# மடிமீது தலை

கஸ்தூரிரங்கனின் ரத்த அழுத்தம் எகிறிக் கொண்டிருந்தது. அவன் தலைக்குள் ஓர் உலைக்களன் கொதித்துச் சூடாக்கியது. விட்ட பெருமூச்சுகள் மூக்கில் காட்டை எரிக்கும் அளவு வெப்பம் கமழ்ந்திருந்தன.

சுகீதா ஏன் வரவில்லை? வாட் த ஹெல் ஹாப்பண்ட் டு ஹர்?

அவள் காதலை அவனிடம் தெரிவிக்கும் வினாடி வரை அவன் கனவுகள் ஏதும் வளர்த்துக் கொள்ளவில்லை. நத்தை போல் ஓட்டுக்குள் தன்னைக் குறுக்கிக் கொண்டிருந்தான்.

அவள் மனத்தைத் திறந்து காட்டி விட்டாள்.

பார். என் இதயம் பார். அதில் இருக்கும் சிம்மாசனம் பார். அதில் வீற்றிருக்கும் உன்னைப் பார்.

எவ்வளவு இனிமையான தருணம்!

அவன் காதல், டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோர்ஸின் ஓர் இருட்டான அறையில் அங்கீகாரம் பெற்றது அதைவிட இனிமையான தருணமாக இருந்தது.

சுகீதாவைப் பார்த்துத் தன் சம்மதத்தைத் தெரிவிக்க மிக ஆவலுடன் காத்திருந்தான்.

ஏன் வரவில்லை?

டெலிஃபோன் அடித்தால் சுகீதா என்று நினைத்தான். வாசலில் புடைவை சரசரத்தால் சுகீதா. முழங்கை வரை நீண்ட கையுடன் ரவிக்கை அணிந்த முதுகு பார்த்தால் சுகீதா.

"ரங்கா. சட்னியில காரம் பத்தலியாம். ஜட்ஜ் சார் கம்ப்ளெய்ன்ட் பண்றாரு."

"என்னை என்னடா பண்ணச் சொல்றே? நானா சட்னியைக் கல்லொரல்ல போட்டு அரைச்சி எடுத்தேன். போ, ஒரு கூடை மொளகாயைக் கொண்டு போய் அந்த ஜட்ஜ் தலைல கொட்டு."

"ஒடம்பு சரியில்லியா ரங்கா?"

"போடா. ஒதை படாம இருக்க சும்னா போய்டு."

விசிலோடு அவனை நெருங்கிய பையன் இப்போது என்னவோ விஷச் சிலந்தியைப் பார்த்த மாதிரி ஒதுங்கிப் போனான்.

கஸ்தூரிரங்கன் அந்த ஆரவாரச் சூழ்நிலையில் இருந்து விலகினான். உள்ளே சென்றான். அவனுடைய நடை, அவனுடைய முகம் எல்லாமே மாறியிருந்ததைப் பாட்டிகள் கவலையோடு பார்த்தார்கள். அவனிடம் திட்டு வாங்கிய பையன் உள்ளே வந்து ரங்காவின் கோபத்தைப் பற்றிப் பற்ற வைத்து விட்டுப் போயிருந்தான்.

கஸ்தூரிரங்கன் தனது அறைக்குள் நுழைந்தான். திறந்திருந்த ஜன்னல் வழியே, தண்ணீர் கொதிக்கும் தளபுள சப்தம் கேட்டது. குக்கரின் கவர்க் கோழி ரீங்காரம் கேட்டது. கறிகாய் வெட்டப்படும் சீரான டக், டக். நடராஜனின் 'பொன்னார் மேனி யனேஏஏஏஏ'.

மற்ற நாட்களில் அந்த ஓசைகள் எல்லாம் கச்சேரியாய் ரசிக்கச் சொல்லும். இன்றைக்கு -

கண்ணாடியில் முகம் பார்த்தான். வெளிறி இருந்தான். ஏதோ தெருச் சண்டைக் கைகலப்பில், அடிதடியில் இறங்கி மீண்டவனைப் போல் தெரிந்தான்.

ஒன்று புரிந்தது.

சுகீதா அவன் மனதைச் சாப்பிட்டு விட்டாள். உலகத்தில் இருக்கும் மற்ற எல்லாவற்றையும் விட, சுகீதாதான் முக்கியமாகப் பட்டாள். அவள்தான் அவனுடைய எல்லாமே. நெஞ்சில் நிறைந்தவள். வானில் வியாபித்தவள். சிரிப்பவள். அலைக்கழிப்பவள். கரப்பானை ஓட விட்டு, ஓட விட்டு தன் பாதத்தால் அறைந்து விளையாடும் பூனை போல் சுகீதா இப்போது அறைந்து விளையாடுகிறாள். விலகி இருந்தவள், நெருங்கி வந்து இப்போது விலகிப் போய் வேடிக்கை காட்டுகிறாள்.

எப்படி அவள் இவ்வளவு சீக்கிரம் நோய்க் கிருமி போல அவன் ரத்தத்தில் பரவினாள்? அவன் எதிர்காலம் அவன் கண்ணெதிரில் ஒரு சோப்புக் குமிழாய் வெடிப்பது போல் இருந்தது. ஒரு பெண்ணால்! நீளக் கை ரவிக்கை அணிந்து, கண்ணோரத்தில் கருக்கம் தெரியச் சிரித்து மயக்கும் ஒரு சிங்காரியால்.

**எல்லோருக்கும் பிரச்னைகள் இருக்கின்றன. யார் எந்தப் பிரச்னையை எப்படி அணுகி எப்படித் தீர்க்க முயல்கிறார்கள் என்பதிலேயே வித்தியாசம் உள்ளது. ஒரு மனிதனுக்குள் பெருத்த பாதிப்பை ஏற்படுத்திவிடக்கூடிய ஒரே பிரச்னை, வேறு ஒரு மனிதனுக்கு எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லை. அந்த இரண்டாவது மனிதன் அந்தப் பிரச்னையை வெகு எளிதாகத் தீர்த்து விடுகிறான்.**

கஸ்தூரிரங்கனுக்கு அந்த நேரத்தில் அது புரியவில்லை. தோன்றவில்லை. புரிந்திருந்தாலும் அதை அலட்சியப்படுத்துகிற அளவுக்கு சுகீதா ஆக்கிரமித்திருந்தாள்.

அவள் வீட்டுக்குப் போகலாம் என்று நினைத்தான். வேண்டாம். நேரமாகி விட்

சுபா

டது. வீட்டில் அவளுடைய பிஸினஸ் அப்பா இருந்தால் என்ன நினைப்பார்? தன் மகளின் முந்தானையைப் பற்ற எனக்கு என்ன தகுதி இருக்கிறது என்று நினைப்பார்.

**க**ஸ்தூரிரங்கன் ஆயிரம் குழப்பங்களுடன் அன்றைய இரவு, படுக்கையில் சரிந்தான். படுக்கையில் படுத்துச் சற்று நேரம் இசை கேட்பான். இன்றைக்கு இசை வேண்டாம். ராத்திரி பல் துலக்கல் வேண்டாம். யாருக்காக மனத்தை நிர்மலமாக வைத்துக் கொள்ள வேண்டும்? யாருக்காக சுவாசத்தை மணக்க மணக்கப் பாதுகாக்க வேண்டும்?

மறுநாள். விடியற்காலை. எழுந்தான். மணி பார்த்தான். நான்கு மணியாக ஐந்து நிமிடங்கள் இருந்தன. முதல் நாள் மாலையின் ஏமாற்ற மிச்சம் இன்னும் மனத்தின் ஒரு மூலையில் இருந்தது. நெஞ்சில் வலித்தது. புதுக் காதல் நெஞ்சை வலிக்கச் செய்யும் போலும்.

அவள் வரட்டும் இன்றைக்கு. முகத்தில் அறைந்து அனுப்பா விட்டால் நான் கஸ்தூரிரங்கன் இல்லை. கஸ்தூரிரங்கன் பிடிவாதமாக அவள் நினைவை அகற்றினான்.

அன்றைய விடிகாலையில் அவன் செய்ய வேண்டிய வேலையின் முக்கியத்துவம் அவனை முடுக்கி விட்டது. கவிதாவை தூரப் போ என்று சொன்னது. நேற்று மாலை கூட இன்றைய காலைப் பொழுதின் வேலையைச் செய்யலாமா கூடாதா என்ற லேசான தயக்கம் இருந்தது.

இப்போது அந்தத் தயக்கம் இல்லை.

உலகில் கவிதா மட்டும்தானா?

# வைத்து

காதல், அன்பு எல்லாம் போலி. எல்லா நதிகளும் கடலில் கலக்கிற மாதிரி எல்லாக் காதல்களும் காமத்தில் போய்க் கலப்பவை.

இன்றைய ஸ்பெஷல் போர்டை ஈரத்துணியால் அழிப்பது போல் அவன் மனத்தின் எண்ணங்களை அழித்தான். பரபர வென்று தன்னைத் தயார் செய்து கொண்டான்.

சபரியை விட்டு வெளியே வந்தான்.

மேலே நிலா இன்னும் ஜிகுஜிகு என்று ஒளிர்ந்தது. நட்சத்திரங்கள். மேகங்கள். குளிர்காற்று. அவன் மெல்ல, ஓரமாய் ஒதுங்கி நின்று கொண்டிருந்த வேனை அணுகினான். டிரைவிங் சீட்டில் உட்கார்ந்து வண்டியைக் கிளப்பினான். வேன் அந்த பிரதேசத்தை விட்டு விலகியதும், ஓர் அகன்ற தார்ச்சாலையில் வரிசையாய் இருந்த மரங்களில் ஒன்றன் கீழ் நிறுத்தினான். ஒரு லீவர் மாதிரி தெரிந்த ஒரு கம்பியைப் பிடித்து இழுத்தான். வேனின் மேற்கூரை மேல் இருந்த இரண்டு போர்டுகள் மெல்ல வளைந்து இறங்கி வேனை அதன் பழைய முகத்தை மாற்றியது. இப்போது இறங்கிய சைட் போர்டு வேனின் இரு பக்கங்களிலும் ஒரு ஷட்டர் போல் இறங்கி நின்றது. இரு பக்கமும் சைட் போர்டுகள் 'தமிழ்நாடு மரைன் பிராடக்ட்ஸ்' என்ற எழுத்துக்களைத் தாங்கி இருந்தன. கஸ்தூரிரங்கன் கீழே இறங்கி, வேனுக்குப் பின்னால் வந்து, அதன் பின் கதவை ஒரு கோணத்தில் திருப்ப, கதவு சட்டென்று சுழன்று நின்றது. வேனின் பின் பக்கத்திலும் இப்போது தமிழ்நாடு மரைன் பிராடக்ட்ஸ் என்ற எழுத்துக்கள்.

கஸ்தூரிரங்கன் நம்பர் ப்ளேட்களைத் திருப்பினான். சற்றுத் தள்ளி நின்று பார்த்தான். அவனுக்கு இப்போது எல்லாமே திருப்தியாய்த் தெரிந்தன.

வேனில் ஏறி சீறிப் புறப்பட்டான். விஷ்,விஷ்,விஷ் என்று மரங்கள் சீவிக் கொண்டு பின்வாங்கின. காற்று அவன் தலைமுடியைக் கலைத்தது. சென்னையில் இருந்து மகாபலிபுரம் போகும் சாலையில் மகாபலிபுரம், முட்டுக்காடு, கோவளம் என்று அறிவிப்புப் பலகை சாலையில் ஃப்ளோரசண்ட் சிவப்பில் ஒளிர்ந்த இடத்தில் இருந்த ஒரு இடதுபக்கச் சாலையில் கஸ்தூரிரங்கன் வேனைச் செலுத்தினான்.

அந்தச் சாலையின் இரு பக்கங்களிலும் அடர்த்தியான சவுக்குத் தோப்புகள். சாலை செம்மண்ணும், கடல் மண்ணும், குண்டும், குழியுமாய். வேனின் விளக்கு வெளிச்சத்தில் கடல் கறுப்பாய்த் தெரிந்தது. அவ்வப்போது எழுந்த கோப அலைகள் மட்டும் வெண்மையாய் நுரை ததும்பத் தெரிந்தன.

கஸ்தூரிரங்கன் வேனை சாலையின் ஒரு பக்கமாக ஒதுக்கினான். அதன் விளக்குகளை அணைத்தான். இறங்கினான். நடந்தான்.

அந்த இடத்தில் மணல்வெளி மிகக் குறுகி இருந்தது. அதனால் சவுக்குத் தோப்பில் இருந்து வெளிப்பட்டவுடனேயே, அலைகளின் ஆர்ப்பாட்டத்தின் காரணமாக சிதறிய நீர்த் திவலைகள் காற்றில் மிதந்து வந்து அவன் முகத்தில் உப்புத் துகள்களாய்த் தெறித்தன.

அவன் ஈர மணலில் நடந்து சென்று நின்றான். கடல்நீர் அவ்வப்போது வந்து அறைந்து சென்றது. கடலையே அவன் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். மணிக்கட்டுத் திருப்பி நேரம் பார்த்தான்.

வானம் ஒரு மாதிரி இயற்கைச் சித்திரத்தை வரைந்திருந்தது. மேலே ஒரு வெள்ளிப் புள்ளி மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. ஜெட் விமானமாய் இருக்கலாம்.

திடீரென்று கஸ்தூரிரங்கனின் புலன்கள் கூராகின. அவன் காதில் அலைகளின் இரைச்சலை மீறி துடுப்புப் போடப்படும் சீரான 'தளபுளக்' 'தளபுளக்' கேட்டது. அவன் பாண்ட் பாக்கெட்டில் இருந்து உள்ளங்கையில் அடங்கக்கூடிய ஒரு சக்தி வாய்ந்த டார்ச் லைட்டை எடுத்தான். அதன் பட்டனை அழுத்தினான்.

டார்ச் கடல் நோக்கி ஒளிர்ந்தது.

டாட் - டாட் - டாட் என்று மூன்று முறை ஒளிரவைத்தான். காத்திருந்தான். அவன் இதயத்தில் அவனையறியாமல் தடக், தடக் ஏற்பட்டது. இதயம் புரண்டு புரண்டு திமிர்கிறதோ என்று தோன்றியது.

தடக் - தடக் - தடக் -தடக்.

எதிரில் இருட்டாய் ரகசியங்களை அழுத்தி வைத்துக் கொண்டிருந்த கடல் இப்போது திடீரென்று உயிர் பெற்ற மாதிரி எழுந்து கொண்டது. காமிராவின் ஃப்ளாஷ் போல மூன்று ஃப்ளாஷ்கள் சிதறின.

## அடுத்த இதழில்...

- **ஏணிப்படியில் இளைஞர் பட்டாளம்!**
- **'கோபம் வந்தால்...'**
  - மனநல மருத்துவர் சொல்கிறார்!

கஸ்தூரிரங்கன் டார்ச் லைட்டைப் பாக்கெட்டில் பத்திரப்படுத்திக் கொண்டு, கடலில் இறங்கினான். தண்ணீரின் சில்தன்மை உடலைச் சிலிர்க்க வைத்தது. முன்னேறினான்.

ஒரு கட்டுமரம் நிழலாய் அவன் இருந்த இடம் நோக்கி வந்தது.

இருவர் கடலில் குதித்து அவனை நெருங்கினார்கள்.

''என்னப்பா?'' என்று அவர்களில் ஒருவன் கஸ்தூரிரங்கனைப் பார்த்து வினவினான்.

''கருவாடு வாங்க வந்தேன்.''

''ரைட். நம்ம ஆள்தான்யா. சரக்கை எடுத்துக்கிட்டு வாய்யா'' என்று கட்டு மரத்தில் காத்திருந்த இன்னொருவனைப் பார்த்து கஸ்தூரிரங்கனைக் கேள்வி கேட்டவன் சொன்னான்.

அவனுடன் கூட வந்தவன் கஸ்தூரிரங்கனை நெருங்கினான். முகத்தில் டார்ச் அடித்தான்.

''நீதானா ரங்கா?'' என்று கேட்டான். ஒரு சம்பிரதாயம் போல, கஸ்தூரிரங்கனின் பாண்ட் பாக்கெட்டில், சட்டைப் பாக்கெட்டில் சோதனை செய்தான்.

## வாள் நுனியில் வானிலை நிலையம்!

வோல்கா கிராட் சரித்திரப் புகழ்பெற்ற நகரம். (இதன் பூர்வாசிரமப் பெயர் ஸ்டாலின்கிராட்.) நாஜிகளின் படையெடுப்பின்போது, அவர்களை உள்ளே நுழைய விடாமல் சுமார் 200 நாட்களுக்கு மேல் போரிட்டு, லட்சக்கணக்கான ருஷ்யர்களைப் பலிகொடுத்து, நாட்டைக் காத்த நகரம். ஹிட்லரைத் தோல்வியைத் தழுவ வைத்த நகரம்.

வோல்கா நதிதீரமும், தாய்நாட்டுச் சிலையும் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் இடங்கள். தாய்நாட்டின் சிலையின் கையிலுள்ள வாளின் நுனியில் வானிலை ஆராய்ச்சி நிலையம் செயல்படுகிறது! அப்படி என்றால் வாளின் பருமன் எத்தனை சதுர அடி இருக்க வேண்டும் என்று கற்பனை பண்ணிப் பாருங்கள்! இந்தச் சிலைக்குப் பீடம் கிடையாது. இதுதான் உலகிலேயே மிக உயரமான சிலையாம்.

- சித்தார்த்



# கரூருக்கு வருகிறோம்!



கரூர் நகர வாசகர்களே, உங்கள் ஊர் பற்றிய சிறப்பிதழ் ஒன்று தயாரிக்கும் வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தால் அதில் என்னென்ன விஷயங்கள் இடம்பெற வேண்டுமென்று விரும்புவீர்களோ அவைபற்றி எங்களுக்கு எழுதியனுப்புங்கள். (தனி மனிதர்களின் சிறப்புகள், தொழில் வளர்ச்சி, அரசியல், மற்றும் ஊரின் பாரம்பரியச் சிறப்பு, சிறுகதை, துணுக்கு என்று எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்).

நீங்கள் எழுதும் விஷயங்களின் அடிப்படையில் நாங்களும் நேரில் வந்து பார்த்து விட்டுப் பிரசுரம் செய்கிறோம்.

உங்கள் ஊர் பற்றிய உங்கள் கருத்துக்கள் வந்துசேரக் கடைசித் தேதி : 10.10.93.

உடனடியாக எழுதியனுப்புங்கள்.

- ஆசிரியர்

கட்டு மரத்தில் இருந்து ஓர் ஓலைக் கூடையை ஒருவன் தலைக்கு மேல் தூக்கி, தண்ணீரில் நடந்து வந்தான்.

கஸ்தூரிரங்கனைக் கடந்து சென்று, சவுக்குத் தோப்புப் பாதையில் நுழைந்து, வேனை அடைந்தான். அதன் பின்புறக் கதவைத் திறந்தான். ஓலைக் கூடையை அதில் ஏற்றினான்.

''ஓ.கே. ஆல் தி பெஸ்ட்! நாங்க புறப்படறோம். ஜாக்கிரதை.''

கஸ்தூரிரங்கன் தலையசைத்தான். அவர்கள் மறுபடி கட்டு மரத்தை அடைந்து அதில் தாவி ஏறினார்கள். 'தளபுளக்' 'தளபுளக்' என்ற சீரான ஒலியுடன் கட்டு மரம் கடலை நோக்கி, அதன் இருட்டை நோக்கி, அதன் ரகசியங்களை நோக்கிச் செல்லத் தொடங்க, கஸ்தூரிரங்கன் வேனில் ஏறி அதைக் கிளப்பினான்.

கொஞ்சம் சிரமப்பட்டு வேனை அந்தச் சாலையில் திருப்பினான். ஒன்றிரண்டு சவுக்கு மரங்கள் அடிபட்டன. வேன் திரும்பியது. அதன் பின்பக்க சிவப்பு விளக்குகள் ஒளிர, பிரதான சாலையை நோக்கி விரைந்து செல்லத் தொடங்கியது.

இன்ஸ்பெக்டர் தேவசகாயம் அந்தப் பிரதேசத்தில் புதிதாகப் பொறுப்பேற்றுக் கொண்ட நேர்மையான அதிகாரி.

சமுதாயத்தின் கறுப்புப் புள்ளிகளை அழித்து விட முடியும் என்பதில் திடமான நம்பிக்கை கொண்டவர்.

பகல் நேர மேஜையடி வேலைகளை விட, இரவு நேர ரோந்துகளில் அதுவும் பின்னிரவு நேர ரோந்துகளில் பல கறுப்புப் புள்ளிகளை அடையாளம் காண முடியும் என்று நம்புபவர்.

அவர் தமது ஜீப்பில் உட்கார்ந்திருந்தார். கடற்கரையோரக் காற்று அவர் முகத்தில் விளையாடியது. ஜீப் சீரான நாற்பதில் விரைந்து கொண்டிருந்தது. வானில் கருக்கல் இருட்டும், விடியலின் வெளிச்சமும் நேருக்கு நேர் மோதிக் கொண்டிருந்த அந்த வேளையில், ஜீப்பின் வெளிச்சத்தில், சவுக்குத் தோப்புகளின் இடையில் ஒளிந்த மாதிரி இருந்த ஒரு கடற்சாலையில் இருந்து ஒரு வேன் வெளிப்படுவதை, அவர் கண்கள் இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் இருந்து பார்த்தன.

''என்னப்பா அது?''

''லாரி மாதிரி தெரியுது சார்.''

''எதுக்கு பீச்சுக்குப் பக்கத்திலேர்ந்து வரான் அவன்?''

போலீஸ் டிரைவர் பதில் சொல்லவில்லை.

''ஆக்ஸிலேட்டரை அமுத்துய்யா. பாத்துடுவோம்.''

''சரிங்கய்யா.''

வேனை நோக்கி போலீஸ் ஜீப் திடீரென துப்பாக்கியில் இருந்து விடுபட்ட தோட்டா போல் பாய்ந்தது.

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

## வீட்டின் அழகு கதவில் தெரியும்!

விஞ்ஞான முறையில்
தயாரிக்கப்பட்ட

# மாயூரம் டிம்பர்

## கதவுகள்

அழகானவை, உறுதியானவை,
நீடித்து உழைப்பவை
காரணம்?

- ★ தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம்
- ★ ஈரப்பதம் குறைக்கப்பட்டது.
- ★ ரசாயன கலவை பாதுகாப்பு
- ★ நேர்த்தியான இயந்திர வடிவமைப்பு

Made to order by:

# MAYURAM TIMBER TRADING COMPANY

83, G.S.T. Road, Tambaram – 600 045. Ph: 465297

# MAYAVARAM TIMBER DEPOT

No. 4, Post Office Road, Mayiladuthurai, Quaid-e-Milleth Dist.
Ph: 3216

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka







